# அடிசிற்கினியாள்





டாக்டர் தா. ஏ. ஞானமூர்த்தி எம். ஏ., பிஎச். டி.
தமிழ்த்துறைத் தலைவர்,
பூ. சா. கோ. கலைக் கல்லூரி, பூளைமேடு,
கோயம்புத்தூர்.





விற்பனை உரிமை:
நல்லமுத்துப் பதிப்பகம்
தஞ்சாவூர்.

# நூன்முகம்

'தங்களுடைய கட்டுரைகள் சிலவற்றை அனுப்புங்கள்; ஒரு நண்பர்மூலம் அவைகளை நூலாக்கி வெளியிடலாம்' என்று ஒருநாள் என் கெழுதகை நண்பர் திரு. செ. பொன்னுசாமி அவர்கள் கூறினர்கள். அவர்களின் அன்புக்கு யான் என்றுமே அஞ்சுபவன். உண்மை அன்புக்குக் கட்டுப்படாதவர் இவ்வுலகில் யாவர்? எனவே, கட்டுரைகள் சிலவற்றை அனுப்பினேன். அவர்களின் அரிய முயற்சியின் விளைவே இந் நூல்.

இந் நூலிலுள்ள கட்டுரைகள் பல ஆண்டுகளுக்குமுன் எழுதப்பெற்றவை. தொல்காப்பியம், பத்துப்பாட்டு, நற்றிணை, குறுந்தொகை, திருக்குறள் முதலிய நம் பண்டைய செந்தமிழ் நூல்களின் நுட்பங்களைத் தெளிவுறுத்தும் சொல்லோவியங் களும், தற்காலத் தமிழ் இலக்கியங்களின் பெற்றிமையினையும் நிகண்டுகளின் சிறப்பினையும் உணர்த்தும் கட்டுரைகளும் இந் நூலில் இடம்பெற்றுள்ளன. இக் கட்டுரைகளில் இரண்டைத் தவிர ஏனையவை, சிறப்பாகத் தமிழில் விஞ்ஞானத்தை வளர்த்து வரும் 'கலைக்கதிர்' இதழில் வெளியானவை. கலைக்கதிர் ஆசிரியர் திரு. ஜி. ஆர். தாமோதரன் அவர்களும், எம் கல்லூரி முதல்வர் திரு. போ. ரா. கிருஷ்ணமூர்த்தி அவர்களும் எனக்கு அளித்து வரும் ஊக்கத்தினலேயே யான் ஓரளவு இடையருது தமிழ்ப் பணி புரிய இயல்கிறது. கலைக்கதிரில் வெளியான என் கட்டுரை களில் சிலவற்றை நூலாக வெளியிட இசைவுதந்த அச் சான்றோர் இருவர்க்கும் யான் எழுமையும் நன்றி செலுத்தும் கடப்பாடுடையேன். தமிழ் இலக்கியத் தேனினைச் சுவைத்தற்கு இந் நூல் ஓரளவு துணைபுரியும் என எண்ணுகிறேன்.

இந் நூலை உருவாக்கித் தந்த என் உழுவலன்பர் திரு. செ. பொன்னுசாமி அவர்களுக்கு யான் என்றும் கடமைப் பட்டவனுவேன். தளராத தமிழ்ப் பற்றோடு, நல்லமுத்துப் பதிப்பக அன்பர் திரு. அ. அரங்கராசன் அவர்கள் இந் நூலை எழிலுற அச்சிட்டு உதவினர்கள். அவர் நன்றியை யான் எங்ஙனம் மறக்கவல்லேன்?

கோவை,<br>
22—3—'62

தா. ஏ. ஞானமூர்த்தி

# உள்ளுறை

# 1

# கட்டுரை நடை

நம் உள்ளத்தில் பல கருத்துக்கள் எழுகின்றன. அவற்றை நாம் வெளியிட விரும்புகின்றோம். அப்போது சொற்கள் நமக்குத் துணைபுரிகின்றன. அஃதாவது, சொற்கள் மூலமாக நாம் நம் உள்ளத்தில் எழும் கருத்துக்களை வெளியிடுகின்றோம். ஒரு பொருளைப்பற்றிப் பல கருத்துக்கள் எழுவது இயல்பு. அக்கருத்துக்களை முறைப் படுத்திச் சொற்களால் அமைப்பதுவே கட்டுரை. ஆனால், வெறும் சொற்களின் கூட்டம் கட்டுரை ஆகாது. கட்டுரையின் ஒவ்வொரு சொல்லும் கருத்திற்கு ஏற்றதாகவும் இடத்திற்குப் பொருந்தியிருப்பதாகவும் இருக்கவேண்டும். சொல்லும் சொற்றொடர்களும் பிழை இன்றி, இனிய ஓசை பொருந்தி அழகுபெற அமையவேண்டும். இங்ஙனம் அமைவதுதான் நடை என்பது.

நடை என்ற சொல்லுக்குச் செலவு என்பது பொருள். கட்டுரை நடை என்றால் கட்டுரைச் செலவு என்பதாகும்.

ஓரிடத்திலிருந்து நடக்கிறவன் பிறிதோரிடத்தை அடைகிருன். அவன் நடப்பதற்குக் கால் கருவியாக அமைகிறது. அவன் நடை அழகாகவும் கம்பீரமாகவும் இருந்தால் அது நம் கவனத்தை ஈர்க்கிறது. அப் பெருமித நடையை நாம் எப்போதும் மறப்பதில்லை. ஆனுல், அவன் நடை காண்பதற்கு விகாரமாக இருந்தால், அதை நாம் விரும்புவதில்லை ; அருவருக்கிருேம். நொந்து மெலிந்த நடையையும் நொண்டி நடப்பதையும் யார் விரும்புவார்கள் ? இதைப் போன்றதுதான் கட்டுரை நடையும். கட்டுரை நடையின் நோக்கமாவது, ஒரு கருத்து ஒருவன் மனத்திலிருந்து மற்ருெருவன் மனத்துச் சேர்தலாகும். ஒருவன் ஓரிடத்திலிருந்து மற்ருேர் இடத்திற்குச் சேர்தற்குக் கால் உதவியாக இருப்பதுபோல் ஒருவன் கருத்து மற்ருெருவன் மனத்தை அடைதற்குச் சொல் கருவியாக உள்ளது. சொற்கள் எவ்வளவுக்கெவ்வளவு அழகாகவும், இனிமையாகவும், பொருளுக்கேற்றதாயும் உள்ளனவோ, அவ்வளவுக்கவ்வளவு படிப்போர் மனத்தில் அச்சொற்களின் பொருள்கள் நன்கு பதியும்; அவற்றை நினைக்குந்தோறும் அவர்கள் உள்ளத்தில் இன்பம் பெருகும். இதனைத்தான் திருவள்ளுவர், 'நவில்தொறும் நூல்நயம்' என்ருர்.

நடையின் தன்மையைக் கண்டு உணர ஓர் உதாரணம் காண்போம்.

ஒரு கிழவிக்கு ஒரு பிள்ளை. அவன் போனுன் சண்டைக்கு ; செத்துவிட்டான். "உன் பிள்ளை சண்டைக்குப் பயந்து ஓட்டம்பிடித்தான்" என்று கொஞ்சம்பேர் கிழவியிடம் வந்து சொன்னுர்கள். கிழவி சொன்னுள், "அவன் சண்டைக்குப் பயந்து ஓடியிருந்தால் கத்தியால் என்னை வெட்டிக்கொண்டு செத்துப்போவேன்" என்று. அவள்

கத்தியை எடுத்துக்கொண்டு சண்டையிடத்திற்குப் போனுள். தன் பிள்ளை மார்பில் காயம்பட்டுச் செத்திருப் பதைப் பார்த்தாள் ; சந்தோஷப்பட்டாள்.

இதே செய்தியை இப்போது வேறுவகையாகச் சொல்லிப் பார்ப்போம்.

முதியவள் ஒருத்தி தன் ஒரே மகனைப் பொருகளத் திற்கு அனுப்பினுள். அம் மகன் அங்கு மிக்க வீரத்தோடு போரிட்டு உயிர்துறந்தான். “உன் மகன் பகைவருக்குப் புறங்கொடுத்து ஓடினுன்” என்று சிலர் சொல்லக் கேட் டாள் அத் தாய்; உடனே அவள் வீர உணர்ச்சி மிக்க வளாய் எழுந்தாள் ; வீட்டினுள்ளே ஓடினுள் ; ஒரு வாளை எடுத்தாள் ; அதனைக் கையிற் பிடித்துக்கொண்டு போர்க் களத்தை நோக்கிப் புறப்பட்டாள். “என் மகன் பேடி யாய்ப் புறங்காட்டி ஓடியது உண்மையாயின் அவனை ஈன் றெடுத்த என் உடம்பை இவ் வாளால் துணித்து இறந்து படுவேன்” என்று மனங்கொதித்துக் கூறினுள். அவள் வீரத்தோடு போர்க்களத்தில் புகுந்து உயிரிழந்து கிடக் கும் பிணங்களைப் புரட்டிப் பார்த்துக்கொண்டே சென்ருள்; அங்குத் தன் மகன் மார்பில் புண்பட்டு இறந்துகிடத்தலைக் கண்ணுற்ருள் ; அளவிலா மகிழ்ச்சிகொண்டாள். அவள் அப்போது அடைந்த மகிழ்ச்சி அவனை ஈன்றெடுத்த போது பெற்ற மகிழ்ச்சியிலும் மிகப் பெரியது.

இப்போது ஒரே செய்தியை இரண்டு வகையாகக் கூறினேம். இவை இரண்டில் எது கேட்பதற்கும் படிப் பதற்கும் சுவையுடையதாக உள்ளதென்பதை நீங்களே உணர்வீர்கள். முதலில் கூறியதைவிட இரண்டாவதாகக் கூறியதுதான் இனிமையுடையதாக உள்ளது. அதைக் கேட்கும்போதே அத் தாயின் வீர உணர்ச்சி நமக்குப்

புலனாகிறதன்றோ? ஒரு செய்தியை ஒருவகையாகச் சொன்னால் சுவைப்பதில்லை; இன்னொரு வகையாகக் கூறினால் சுவைக்கிறது. ஏன்? அச்செய்தியைக் கூறுகிற நடையே இதற்குக் காரணம். நாம் இப்போது கண்ட முதல் வகையில் உள்ள சொற்களைவிட இரண்டாவது வகையில் அமைந்துள்ள சொற்களும் சொற்றொடர்களும் மிகவும் பொருத்தமானவை; இடத்திற்கு ஏற்றவை; இனிமையுடையவை. அதனால்தான் அதன் நடை சிறந்து சுவைபொருந்தி விளங்குகிறது.

உலகத்தில் பல நிகழ்ச்சிகள் நிகழ்கின்றன. அவற்றை நாம் காண்கின்றோம். அவைகள் எல்லாம் நம் கவனத்தைக் கவர்வதில்லை. உதாரணமாக யாரோ ஒருத்தி தன் மகனை இழந்து புலம்புகிறாள் என்று வைத்துக்கொள்வோம். அவளுடைய புலம்பல் நம் காதில் விழுகிறது. ஆனால், நாம் அதைப் பொருட்படுத்தாமல் நம் வழியே செல்கிறோம். அவளுடைய புலம்பலிலே நாம் சாதாரணமாக நம் சிந்தையை இழப்பதில்லை. ஆனால், அதையே ஒரு சிறந்த புலவர் தம் நூலில் அமைப்பாரானால் அதை நாம் படித்துப் படித்து நெஞ்சம் உருகுகிறோம். உதாரணமாகத் தன் மகனை இழந்து சந்திரமதி புலம்புவதாகப் புலவர் கூறுவதைப் பாருங்கள்:

"என் அருமை மகனே, நீ பனியால் நனைந்தாய்; வெயிலால் உலர்ந்தாய்; பசியால் வாடினாய்; அப்போதெல்லாம் நீ இறக்கவில்லை. ஆனால், இப்போது அநியாயமாகக் கொடிய பாம்பொன்றினால் கடியுண்டு இறந்தாய். என்ன பாவத்தினால் உனக்கு இந்தக் கதி நேர்ந்ததோ தெரியவில்லை. விடம் தலைக்கேறி இறந்துபட்டுத் தன்னந் தனியனாய்த் தரைமீது உருண்டுகிடக்கும் என் அருமை மகனே, இனி நானும் என் கணவனும் யாரை

நம்பி உயிர்வாழ்வோம்? எங்கள் வாழ்நாள் எல்லாம் வீழ்நாளாய்விட்டதே!"

இந்தப் புலம்பலை நாம் படிக்கும்போது நம் நெஞ்சம் உருகுகிறதன்றோ? காரணம், புலவர் அந் நிகழ்ச்சியைக் கூறுகின்ற நடையேயாகும். அந் நடை படிப்பவர் உள்ளத்தில் சோக உணர்ச்சியை எழுப்புகிறது. 'நனைந்தாய்; உலர்ந்தாய்; வாடினாய்; இறந்தாய்; யாரை நம்பி உயிர் வாழ்வோம்' முதலிய சொற்களில் எவ்வளவு சோகம் நிறைந்திருக்கிறது! இவைகள் தக்க இடத்தில் அமைந்து படிப்பவர் உள்ளத்தில் சோகத்தை மிகுவிக்கிறது. இங்ஙனம், கூறுகின்ற பொருளுக்கேற்பச் சுவை தரும்படியான சொற்களை அமைத்து எழுதுவதே சிறந்த நடையெனக் கருதப்படும்.

பொருளுக்கேற்ற சொல்லாவது யாது? இன்னின்ன பொருளுக்கு இன்னின்ன சொற்கள் என்று அறிஞர்கள் வரையறுத்துள்ளார்கள். உதாரணமாக, பசுவின் குழந்தையைக் 'கன்று' என்று சொல்லவேண்டும். குதிரையின் குழந்தையைக் 'குட்டி' என்று கூறவேண்டும். 'பசுவின் குட்டி', 'குதிரைக் குஞ்சு' என்று கூறுவது தவறு. யானைப்பாகன், ஆட்டிடையன் என்று கூறுவதுதான் முறை. யானைஇடையன், ஆட்டுப்பாகன் என்று கூறுவது பொருந்தாது. 'கள் குடித்துக் களித்தான்' என்று கூறவேண்டுமேயன்றிக் 'கள் குடித்து உவந்தான்' என்று சொல்லுதல் கூடாது. கள் குடித்தால் ஏற்படும் வெறியுணர்ச்சியைக் 'களிப்பு' என்று கூறுவது தான் பொருந்தும். இப்படிப் பொருளுக்கேற்ற சொற்கள் அமைந்த கட்டுரைதான் செம்மையான நடையுடையதாகும். திறமை மிக்க எழுத்தாளர்கள் நூல்களை நாம் ஆராய்வோமானால் அங்குள்ள ஒவ்வொரு சொல்லும்

பொருளுக்குப் பொருத்தமானதாய் இருத்தலைக் காணலாம்.

இங்கு ஓர் உதாரணத்தை ஆராய்வோம்.

"இந் நாளிலும் நாட்டு மாந்தர் விருப்புடன் கண்டு களிப்பது ஆட்டுப்போர். ஆட்டுக் கடாக்களைப் போட்டிக் காகவே வளர்ப்பர் சிலர். அவற்றைப் 'பொருதகர்' என்பர் திருவள்ளுவர். போரிடும் ஆடுகள் ஒன்றையொன்று உருத்து நோக்கும்; எழுந்து தாக்கும்; பின்வாங்கும்; முன்னேறும்; குதித்துப் பாயும்; குதித்து முட்டும்; விலக்கினாலும் விடாது; வெம்போர் விளைக்கும்"

ஒரு நல்ல கட்டுரையிலிருந்து எடுக்கப்பட்ட ஒரு சிறு பகுதி இது. இது படிப்பதற்கு எவ்வளவு இனிமையாக இருக்கின்றது! இதனை நன்கு கவனித்தால் இடத்துக்கேற்ற சொற்கள் அழகாக அமைந்திருப்பதைக் காணலாம்.

மாந்தர் விருப்புடன் கண்டு களிப்பது ஆட்டுப்போர்—இத்தொடரில் 'களிப்பது' என்ற சொல் இடத்திற்கேற்றதாய் அமைந்துள்ளது. இரண்டு ஆட்டுக் கடாக்கள் ஒன்றையொன்று மோதிப் போரிடுவதைக் காணும் மக்கள் மனம் உற்சாகம் அடையும். இந்த உற்சாகத்தைக் 'களிப்பு' என்று சொல்வதுதான் பொருத்தமுடையது. இங்ஙனமே, 'பின்வாங்கும்', 'முன்னேறும்' முதலியவை பொருளுக்கேற்ற சொற்களாகும். 'பின்னேறும்' 'முன்வாங்கும்' என்று சொல்லுவது எவ்வளவு பொருத்தமற்றது பாருங்கள். இன்னும், "போரிடும் ஆடுகள் ஒன்றையொன்று உருத்து நோக்கும்; எழுந்து தாக்கும்; பின்வாங்கும்; முன்னேறும்; குதித்துப் பாயும், குதித்து முட்டும்." இங்கு நடையின் ஓசையைக் கவனியுங்கள்.

இரண்டு ஆட்டுக் கடாக்கள் ஒன்றையொன்று மோதிப் போரிடுவதுபோலவே இருக்கின்றதன்றே இவ்வோசை? இதனுல்தான் இப்பகுதி பொருள் சிறந்து, இன்னேசை மிகுந்து செம்மையான நடையுடையதாய்ச் சிறந்து விளங்குகிறது.

கருத்துக்கு உடை போன்றவை சொற்கள் என்றும் கூறலாம். ஒருவன் அழகான உடை அணிந்தால் அழகு பெறுகிருன். அழகில்லாதவன்கூட அழகுடை அணிந்தால் அவனது தோற்றம் கவர்ச்சியாக இருக்கிறது அன்றே? 'உடையே மனிதனே மனிதனுக்குகிறது' என்ற பழமொழியும் ஆங்கிலத்தில் உண்டு. மனிதன் அழகு மிகுந்த ஆடையால் பொலிவு பெறுவதுபோல ஒரு கட்டுரை, அதன்கண்ணுள்ள சீரிய சொற்களால் அழகு பெறுவதாகும். ஒரு பொருளேக் குறிக்கும் பல சொற்கள் நம் தமிழ்மொழியில் உள்ளன. அவற்றுள் எது எது எந்தெந்த இடத்திற்குப் பொருளோடு பொருந்தி அழகும் இனிமையும் தருமோ அவற்றைத் தேர்ந்தெடுத்துக் கட்டுரையில் அமைக்கவேண்டும். இதற்குப் பலகாலம் பயிற்சி வேண்டும். தற்காலத்தில் தலேசிறந்த கட்டுரைகளாக விளங்குபவை எல்லாம் இங்ஙனம் பலமுறை சிந்தித்து எழுதப்பட்டவையேயாம். அவைகள் நினேத்த மாத்திரத்தில் ஒரு நொடியில் எழுதப்பட்டவை அல்ல; அறிஞர்களின் ஆழ்ந்த சிந்தனேயில் உதித்தவை.

எல்லா வகையான கட்டுரைகளுக்கும் ஒரே மாதிரியான நடை கூடாது. கட்டுரையின் பொருளுக்கேற்ப நடை வேறுபடவேண்டும். இலக்கியக் கட்டுரை நடை வேறு; வரலாறு, விஞ்ஞானம் முதலியவைபற்றிய கட்டுரை நடை வேறு. இலக்கியக் கட்டுரையில் நினேக்குந்தோறும் இனிக்கும் சொற்கள் நயம்பட அமைய வேண்

டும். உவமை, உருவகம் முதலிய அணிநலன்கள் ஆங்காங்குப் பொருந்திக் கட்டுரையைச் சுவையுடையதாக்க வேண்டும்.

கீழ்வரும் அடிகளை நோக்குங்கள் : " இனி மலையை விடுத்துக் கடலிற் பாய்வோம் ; கடற்கரை நண்ணுவோம் ; அலை பாடுகிறது. அப் பாட்டமுதைப் பருகப் பருக நெஞ்சம் கடலிற் படிகிறது ; தன்னை அறியாமலே வானிலும் புகுகிறது."

இதன் பொருளாவது : கட்டுரை ஆசிரியர் கடற்கரையில் நின்று அலையின் அழகில் ஈடுபடுகிருர் ; அடுத்து வானத்தை நோக்குகிருர் என்பதுவே. இதை அலை இன்னிசை பாடுவதாகவும் அந்த இசை அவருக்கு அமிழ்தம் போல இனிப்பதாகவும், பின்பு அவரை யறியாமலே அவர் நெஞ்சம் வானத்தில் புகுவதாகவும் நயம்பட அக் கட்டுரை ஆசிரியர் உரைக்கிருர். இத்தகைய நடை இலக்கியக் கட்டுரைக்கு மிகவும் பொருந்துவதாகும். ஆனுல், வரலாறு, விஞ்ஞானக் கட்டுரைகளில் கருத்துக்களை நேர்முகமான சொற்களால் உரைக்கவேண்டும். புனைந்துரைப்பது அங்குக் கூடாது. புனைந்துரைத்தால் பொருளில் தெளிவின்றி ஐயம் ஏற்படக்கூடும். மாணவர்கள் தத்தம் பள்ளிகளிலும் கல்லூரிகளிலும் எழுதும் கட்டுரைகளின் நடை எளிதாகவும் தெளிவாகவும் இருக்க வேண்டும். கருத்துக்களை இனிய, எளிய சொற்களில் வெளியிடவேண்டும். இயன்றவரையில் கருத்துக்களைச் சிறுசிறு வாக்கியங்களில் அமைப்பது நலம். சிறுசிறு வாக்கியங்கள் நடைக்கு விறுவிறுப்பைத் தரும்.

பொதுவாக எல்லாவகையான கட்டுரைகளுக்கும் மேற்கொள்ளவேண்டிய விதிகள் முக்கியமாக மூன்று.

அவையாவன: பிழையின்மை, சுருங்கக்கூறல், விளங்க வைத்தல்.

பிழையின்மையாவது: எழுத்துப் பிழை, சந்திப் பிழை முதலிய பிழைகளைக் கட்டுரையில் தவிர்க்கவேண்டும். இப் பிழைகள் இருந்தால் கட்டுரை படிப்பதற்கும் கேட்பதற்கும் இனிமையாக இருக்காது. ஒருவர் நமக்குச் சுவையான உணவைத் தருகிறார் என்று வைத்துக்கொள்வோம். அவ் வுணவில் பொடிக் கற்கள் நிரம்பக் கலந்திருந்தால் அதை நம்மால் உண்ணமுடியுமா? முயன்று அதை உண்டால் நம் பற்கள் உடைந்துவிடாதா? இதைப்போன்றதுதான் எழுத்துப் பிழையும், சந்திப் பிழையும் நிறைந்த கட்டுரை. கட்டுரையின் பொருள் எவ்வளவு சிறந்ததாய் இருந்தாலும் அதன் நடையில் பிழைகள் நிறைந்திருந்தால் அக் கட்டுரை படிப்பதற்குச் சுவைக்காது; இனிமையாக இராது; கரடுமுரடாய் இருக்கும்.

சுருங்கக்கூறலாவது: கட்டுரையில் கூறவேண்டியவற்றைச் சுருக்கமாக உரைப்பதாம். வேண்டாத சொற்களைக் கட்டுரையில் புகுத்தக்கூடாது. சொல் சுருக்கமுடைய கட்டுரையே சிறந்து விளங்கும். சொல் எளிமையாக இருப்பினும் கருதிய பொருள் தெளிவாக விளங்க வேண்டும். ‘இதற்குப் பொருள் இதுவோ அதுவோ’ என்ற ஐயம் எழக்கூடாது. இதுவே விளங்கவைத்தல் என்பது.

இதுவரை நடையின் தன்மையையும் பொருத்தத்தையும் ஒருவாறு ஆராய்ந்தோம். இந் நடையை ஒருவரிடமிருந்து கற்பதென்பது முடியாது. அவரவர் கல்வி, அறிவு, அனுபவம், பயிற்சி முதலியவற்றிற்குத் தக

அவர்தம் நடை அமைவதாகும். கட்டுரைகளை இடையறாது எழுதிப் பழகுகின்றவர்கள் நாளடைவில் சிறந்த நடை கைவரப்பெறுவார்கள். கட்டுரை எழுதுவது ஓர் இணையற்ற கலை. மாணவர்கள் கட்டுரைப் பயிற்சியைத் தளரா ஊக்கத்தோடு மேற்கொள்வார்களேயானால் விரைவில் அவர்கள் பல நல்ல கட்டுரைகளைத் தோற்றுவிக்கலாம்.

" சித்திரமும் கைப்பழக்கம்
செந்தமிழும் நாப்பழக்கம்
நடையும் நடைப்பழக்கம் "

---

# 2

# தற்கால இலக்கியங்கள்

சங்ககாலத்தில் பல சிறந்த இலக்கியங்கள் தோன்றின. தமிழ் இலக்கிய வரலாற்றில் அக் காலத்தைப் 'பொற்காலம்' என்பர். கடைச்சங்கத்தின் இறுதிக் காலம் கி. பி. 200 என்று அறிஞர் கருதுகின்றனர். எட்டுத் தொகை, பத்துப்பாட்டு, பதினெண்கீழ்க்கணக்கு, சிலப் பதிகாரம், மணிமேகலை ஆகியவை இப்போது நமக்குக் கிடைக்கும் கடைச்சங்க நூல்களாகும். அடுத்துச் சைவ சமய குரவர் நால்வரும், ஆழ்வார்களும் தோன்றித் தத்தம் சமய வளர்ச்சிக்காகப் பல பக்திப் பாடல்கள் பாடினர். அப் பாடல்கள் தேவாரம், திருவாசகம், நாலாயிரத் திவ்யப்பிரபந்தம் என்ற நூல்கள் வடிவில் விளங்குகின்றன. பல்லவர் காலத்தில் இப் பக்திப் பாடல்கள் எழுந்தன. பின்பு சோழர் பேரரசு ஓங்கியிருந்த காலத்தில் சீவகசிந்தாமணி, சூளாமணி, கம்பராமாயணம், பெரியபுராணம் முதலிய அரிய காப்பியங்கள் தோன்றின. இதற்குப் பிறகு பல புராணங்களும், பிள்ளைத்தமிழ், கலம்

பகம், உலா, தூது முதலிய சிறு பிரபந்தங்களும் பாடப் பெற்றன. புராணங்களும், சிறு பிரபந்தங்களும் 19-ஆம் நூற்ருண்டுவரை பல புலவர்களால் இயற்றப்பெற்றன. இவையனைத்தும் செய்யுள் நூல்களே. தமிழ்நாட்டோடு மேனுட்டார் தொடர்பு கிடைக்கும்வரை தமிழ் இலக்கியங்க ளெல்லாம் பழஞ் செய்யுட்களாலேயே அமைந்திருந்தன. மேனுட்டார் தொடர்பு கிடைத்த பின்பு தமிழ் இலக்கிய உலகில் மறுமலர்ச்சி ஏற்பட்டது. பல புதுவகையான இலக்கியங்கள் வளரத் தலைப்பட்டன. மக்கள் பலரும் அவ் விலக்கியங்களைப் படித்து இன்புறும் வாய்ப்பு ஏற்பட் டது. தமிழ்மொழி விரைந்து ஆக்கம் எய்தியது எனலாம்.

இப் புதுவகை இலக்கியங்களுள்ளே முதன்மையாகக் குறிப்பிடத்தக்கது உரைநடை இலக்கியம். செய்யுளுக்கு அசை, சீர், அடி, தளை, தொடை என்ற உறுப்புக்களும் அடிவரம்பும் இருப்பதால் எப்பொருளையும் அதன்கண் சுருக்கமாகவே கூறமுடியும். இத்தகைய வரம்பு உரை நடைக்கு இல்லை. ஆகையால், பல சொற்ருெடர்களால் தொடர்ந்து உரைநடையில் எப்பொருளையும் விரிவாகக் கூற இயலும். இதனுல் உரைநடை நூல்களை யாவரும் எளிதில் புரிந்துகொள்ளலாம். நம் பழங்காலப் புலவர் களுக்கு உரைநடை எழுதத் தெரியாது என்று கொள் வதற்கில்லை. பண்டை இலக்கியங்கள், இலக்கணங்கள், மருத்துவ நூல்கள் முதலானவற்றின் விரிவுரைகளை நோக்கும்போது, பழங்காலப் புலவர்களின் உரைநடைப் புலமை நன்கு புலனுகும். ஆனுல், பழங்கால நிலை தனி உரைநடை இலக்கியங்களுக்கு இடந்தரவில்லை.

மேனுட்டார் தொடர்பால் தமிழ்நாட்டில் அச்சுப் பொறிகள் அமைக்கப்பட்டன. தமிழ்நாட்டில் முதன் முதல் தஞ்சைக்கடுத்த தரங்கம்பாடி என்ற ஊரில் கி. பி.

1713-ஆம் ஆண்டில் அச்சுப்பொறி அமைக்கப்பட்டது. 19-ஆம் நூற்றுண்டிலிருந்து தமிழ்நாட்டில் அச்சுப்பொறிகள் மிகுதியாகப் பல்கின. இவற்றின் துணையால் பல உரைநடை நூல்களும் ஏனைய நூல்களும் வெளியிடப்பட்டன.

தமிழில் முதன்முதல் 16-ஆம் நூற்றுண்டிலேதான் தனி உரைநடை நூல் தோன்றியது. கிறித்தவப் பாதிரிமார் பலர் தம் சமயத்தைத் தமிழகத்தில் பரப்புதற்பொருட்டுப் பல உரைநடை நூல்களை வெளியிட்டனர். கி. பி. 1577-ஆம் ஆண்டில் ‘ கிறித்தவ வேதோபதேசம் ’ என்ற நூல் ஏசுவின் சபைப் பாதிரிமாரால் வெளியிடப்பெற்றது. இதுவே முதன்முதல் தோன்றிய தனி உரைநடை நூல் ஆகும். கி. பி. 1579-இல் ஆன்றிக் என்ற பாதிரியார் எழுதிய ‘ கிருத்துவ வணக்கம் ’ என்ற நூல் வெளியிடப்பெற்றது. பின்பு 16-ஆம் நூற்றுண்டில் ராபர்ட் நொபிலி என்னும் தத்துவபோத சுவாமி அவர்களும், ஜான்-டி-பிரிட்டோ என்னும் அருளானந்தர் அவர்களும் தமிழில் சில உரைநடை நூல்களை எழுதினர். 18-ஆம் நூற்றுண்டில் பெஸ்கி என்னும் வீரமா முனிவர் அவர்களும், சீகன் பால்கு முதலான ஜெர்மனி தேசத்துப் பாதிரிமார்களும் சில உரைநடை நூல்களை இயற்றியுள்ளனர். இப்பாதிரிமார்கள் தம் சமயத்தைப் பரப்புதற்காகச் செய்த இம் முயற்சி ஒருவகையில் தமிழகத்திற்கு நன்முயற்சியாகவே முடிந்தது. இவர்தம் முயற்சியால் 19-ஆம் நூற்றுண்டில் உரைநடை இலக்கியம் வேரூன்றத் தலைப்பட்டது. இந் நூற்றுண்டில் கல்வி வளர்ச்சியையொட்டிச் சில சங்கங்கள் தோன்றித் தமிழ் உரைநடை நூல்களை வெளியிட்டன. “ சென்னைக் கல்விச் சங்கம் ” (Madras College) என்னும் சபை பாடநூல்களையும், வேறு சில உரைநடை நூல்களையும் வெளியிட்டது. “ சென்னைப் பள்ளிப் புத்தகச் சங்கம் ”

2548



(The Madras School Book Society) என்பதும் பல உரைநடை நூல்களை 19-ஆம் நூற்றுண்டில் வெளியிட்டது. கிழக்கிந்திய அரசாங்கத்தார் நன்னூல் இலக்கணத்தை உரைநடையாக எழுதுவோர்க்குப் பரிசளிப்பதாக விளம்பரப்படுத்தினர். அதன் விளைவாகத் தமிழில் பல உரைநடை இலக்கணங்கள் தோன்றின. 19-ஆம் நூற்றுண்டில் உரைநடை நூல் இயற்றியவருள் தலை சிறந்தவர் ஆறுமுக நாவலராவார். அவர் 'பெரியபுராண வசனம்', 'கந்தபுராண வசனம்', 'திருவிளையாடற் புராண வசனம்' முதலியவைகளை இனிய நடையில் இயற்றினுர். இன்னும் அவர் எழுதிய உரைநடை நூல்களாவன: 'இலங்கைப் பூமி சாத்திரம்', 'சிதம்பர மான்மிய வசனம்' முதலியவைகளாகும். இப் பெரும் புலவரை 'வசனநடை கைவந்த வள்ளலார்' என்று வி. கோ. சூரியநாராயண சாத்திரியார் அவர்கள் பாராட்டியிருக்கிறுர்.

20-ஆம் நூற்றுண்டிலே செம்மையான உரைநடை நூல்கள் மிகுதியாகத் தோன்றலாயின. இந் நூற்றுண்டிலே முன்னினும் மிகுதியான அச்சுக்கூடங்கள் அமைக்கப்பட்டன. இதனுல் ஆங்கில நூல்கள்போலத் தமிழ் நூல்களும் செம்மையான முறையில் பதிப்பிக்கப்பெற்றன. பச்சையப்பன் கல்லூரியில் தமிழ்த்துறைத் தலைவராய் இருந்த செல்வக்கேசவராய முதலியார் செவ்விய செந்தமிழ் நடையில் கட்டுரைகளும் நூல்களும் இயற்றினுர். இவரது தமிழைப்பற்றிய கட்டுரையும், கம்பன், திருவள்ளுவர் ஆகியோரைப்பற்றி எழுதிய நூல்களும் சிறப்பாகக் குறிப்பிடுதற்குரியவை. மிக எளிய நடையில் தமிழ் உரைநடை நூல்களை எழுதி வெளியிட்டுத் தமிழை வளர்த்தவர் திரு. கா. நமச்சிவாய முதலியார் ஆவர். இவர் பள்ளிகளுக்குரிய பாடநூல்கள் எழுதுவதில் தலை

சிறந்தவர். மறைமலை அடிகள் இயற்றிய உரைநடை நூல்கள் தனித்தமிழால் இயன்றவை. அவருடைய முயற்சியால் தனித்தமிழ் நூல்கள் பல தோன்றலாயின. அவர் 'முல்லைப்பாட்டாராய்ச்சியுரை', 'மாணிக்கவாசகர் வரலாறும் காலமும்' முதலிய நூல்களை எழுதித் தமிழ் உரைநடையை வளம்படுத்தினர். இன்னும் தனித்தமிழ் உரைநடையை வளர்த்தவருள் சிறப்பாகக் குறிப்பிடுதற் குரியவர் திரு. பா. வே. மாணிக்க நாயக்கர் ஆவர். திரு. வி. கலியாணசுந்தரனுர் அவர்கள் தலைசிறந்த உரை நடை நூலாசிரியர்களுள் நனிசிறந்தவர் எனலாம். தமிழ் உரைநடையில் ஒரு புது நடையைக் கண்டவர் அவர்; அரும்பெருங் கருத்துக்களைச் சிறுசிறு சொற்ருெடர்களில் மிக இனிமையாக அறிவுறுத்தும் ஆற்றல் பெற்றவர். அவர் 'காந்தி அடிகளும் மனித வாழ்க்கையும்', 'பெண் ணின் பெருமை', 'முருகன் அல்லது அழகு' முதலிய செந்தமிழ் மணக்கும் சிறந்த உரைநடை நூல்களை எழு தித் தமிழ் உரைநடையில் மறுமலர்ச்சியைத் தோற்று வித்தார்.

இன்னும் இந் நூற்ருண்டில் சிறந்த உரைநடை இலக்கியங்களை எழுதித் தமிழ் உரைநடையை வளர்த் தவர்களுள் சிறப்பாகக் குறிப்பிடத்தக்கவர்கள் திரு. ந. மு. வேங்கடசாமி நாட்டார், திரு, பண்டிதமணி மு. கதிரேசஞ் செட்டியார், திரு. சோமசுந்தர பாரதியார், திரு. ரா. பி. சேதுப்பிள்ளை, திரு. தெ. பொ. மீனுட்சிசுந்தரனுர் ஆகி யோர் ஆவர்.

உரைநடையாலேயே ஒரு மொழியின் இலக்கியம் விரைந்து வளரமுடியும். திரு. வேதநாயகம் பிள்ளை அவர்கள், "வசன காவியங்களால் மக்கள் திருந்தவேண் டுமே யல்லாது செய்யுட்களைப் படித்துத் திருந்துவது

அசாத்தியமன்ரே?” என்று உரைநடை இலக்கியத்தின் இன்றியமையாமையை வற்புறுத்துகிருர்.

மேனுட்டார் தொடர்பால் அவர்தம் முறைப்படி வரலாற்று நூல்களும், விஞ்ஞான நூல்களும், மொழி பெயர்ப்பு நூல்களும், இலக்கிய ஆராய்ச்சி நூல்களும் தோன்றின. 19-ஆம் நூற்ருண்டில் மேனுட்டுப் பாதிரிமார்களாலும் அரசியலாராலும் நாடெங்கும் பள்ளிகள் நிறுவப்பட்டன. இவற்றிற்காக மேனுட்டார் முறைப்படி நிலநூல், வரலாறு முதலிய நூல்கள் எழுதப்பெற்றன. முதன்முதல் கிறித்துவப் பாதிரிமார்கள் தம் சமய நூல்களைத் தமிழ் உரைநடையில் மொழிபெயர்த்தனர். சென்னைப் பள்ளிப் புத்தகச் சங்கத்தார் (The Madras School Book Society) முயற்சியால், ‘இராபின்சன் குருசோ’, ‘இந்திய சரித்திரம்’, ‘உலக சரித்திரம்’ முதலிய சிறந்த மொழிபெயர்ப்பு நூல்கள் வெளியாயின. இருபதாம் நூற்ருண்டில் வெளிவந்துள்ள மொழிபெயர்ப்பு நூல்களும், விஞ்ஞான நூல்களும், விஞ்ஞானக் கட்டுரைகளும் மிகப் பல. தற்போது தமிழே ஆட்சிமொழியாகவும் கல்லூரிகளில் பயிற்சிமொழியாகவும் ஏற்படக்கூடிய நிலைமையுள்ளதால் இன்னும் பல மொழிபெயர்ப்பு நூல்களும், விஞ்ஞான நூல்களும் வெளியிடும் முயற்சியில் நம் அரசியலார் ஈடுபட்டுள்ளனர். அவர்தம் நன்முயற்சியால் தமிழில் அத்தகைய நூல்கள் பல விரைவில் வெளிவரும் என்பதில் ஐயமில்லை. இந் நூற்ருண்டில் மேனுட்டவர் இலக்கிய ஆராய்ச்சி முறையில் சில ஆராய்ச்சி நூல்கள் தமிழில் இயற்றப்பட்டுள்ளன. திரு. வி. கோ. சூரியநாராயண சாத்திரியார் இயற்றிய ‘தமிழ்மொழி வரலாறும்’, திரு. எஸ். வையாபுரிப்பிள்ளை எழுதிய ‘தமிழ்ச் சுடர் மணிகள்’, ‘காவிய காலம்’ முதலிய நூல்களும் இத்தகைய ஆராய்ச்சி நூல்களாம்.

தமிழில் மொழியாராய்ச்சி நூல்கள் சில இந் நூற்ருண்டில் தோன்றியுள்ளன. இந் நூல்கள் தோன்றுதற்கு வழிகோலியவர் திரு. கால்டுவெல் ஐயர் அவர்கள் ஆவர். அவர் தமிழ், தெலுங்கு, கன்னடம், மலேயாளம், துளு முதலிய திராவிட மொழிகளுக்கு அடிப்படையான இலக்கணம் ஒன்றே என்று நிறுவியும், இத் திராவிட மொழிகளின் இலக்கணம் வடமொழி இலக்கணத்தினும் வேறுபட்டது என்று தெளிவுபடுத்தியும், 'திராவிட மொழிகளின் ஒப்பிலக்கணம்' என்ற ஒரு சிறந்த நூலே ஆங்கிலத்தில் எழுதினுர். இந் நூலின்வாயிலாகத் தென்னிந்திய மொழிகளேப்பற்றிய பல உண்மைகள் தெளிவாயின. இதற்குப் பின்னர் இந் நூற்ருண்டில் தமிழில் சில மொழி நூல்கள் எழுதப்பெற்றன. இன்னும் தற்போது தமிழில் உள்ள பெரியோர்களின் வாழ்க்கைவரலாறு, சுயசரிதைகள், பயண நூல்கள் முதலியன மேனுட்டார் சார்பினுல் தோன்றியவையே ஆகும்.

புதினம் அல்லது நாவல், உரைநடை இலக்கியத்தின் ஒருவகை. இது மேனுட்டார் தொடர்பால் புதியதாகத் தமிழ்நாட்டில் தோன்றிய கற்பனேக் கதைநூல். இது வாழ்க்கையின் இயல்பை அடிப்படையாகக்கொண்டு எழுதப்பெறுவதாகும். நிகழ்ச்சிகளும், செயல்களும், அவற்றை நிகழ்த்தும் உறுப்பினர்களும், உறுப்பினரிடையே நிகழும் உரையாடல்களும், நிகழ்ச்சி, செயல் ஆகியவை நிகழும் இடமும் காலமும், முடிவாக உணர்த்தப்பெறும் வாழ்க்கைபற்றிய கருத்து அல்லது சிக்கல்கள் ஆகிய இவை அனேத்தும் கொண்டு அமைவது புதினமாகும். வரலாற்று நிகழ்ச்சிகளே அடிப்படையாகக்கொண்டு புதினம் எழுதுவதும் உண்டு.

முதன்முதல் தமிழில் தோன்றிய புதினம் 'பிரதாப முதலியார் சரித்திரம்' என்பதாகும். இது சமூகத்தைப்

பற்றிய புதினம். இதனை இயற்றியவர் 19-ஆம் நூற்றுண்டில் வாழ்ந்த வேதநாயகம் பிள்ளை என்ற அறிஞராகும். இவரைத் 'தமிழ்ப் புதினத்தின் தந்தை' எனலாம். ஆங்கிலப் புலமை நிரம்பிய இவ்வறிஞர் ஆங்கிலப் புதின முறையில் இந்நூலை இயற்றினர். இந் நூல் உயர்நிலையிலுள்ள வேளாளர் குடும்ப வரலாற்றைச் சித்திரிக்கிறது. தற்கால புதினங்களில் உள்ளவை போல வருணனைகளும் உளவியல் முறைகளும் அந் நூலில் இல்லாமற்போயினும், அதன்கண் கற்பனை அழகு நிறைந்துள்ளது. முக்கிய கதை உறுப்பினர்களைச் சிறந்த பண்பாளர்களாகவே அவர் படைத்துள்ளார். அடுத்து திரு. இராசம் ஐயர் என்பவர் 'கமலாம்பாள்' என்ற புதினத்தை இயற்றினர். திரு. வி. கோ. சூரியநாராயண சாத்திரியார் இயற்றிய 'மதிவாணன்' என்பது தனித்தமிழ் நடையில் அமைந்த ஒரு சிறந்த புதினமாகும். இந் நூற்றுண்டில் ஆரணி திரு. குப்புசாமி முதலியார் ஆங்கிலத்தில் ரெயினுல்ட்சு (Reynolds) எழுதிய புதினங்களைத் தழுவிப் பல தமிழ்ப் புதினங்களை இயற்றினர். தற்போது பெரும்பான்மையான மக்கள் புதினங்களை மிக்க ஆர்வமுடன் படிப்பதால் அந்நூல்கள் பல வெளிவருகின்றன. தற்போது வெளிவந்துள்ள புதினங்களுள் கல்கி, டாக்டர் மு. வரதராசனுர் ஆகியோர் எழுதிய புதினங்களைச் சிறப்பாகக் குறிப்பிடலாம். கல்கியின் புதினங்களாகிய 'சிவகாமியின் சபதம்' 'பார்த்திபன் கனவு' முதலியவை பல்லவர், சோழர் ஆட்சியின் வரலாற்று அடிப்படையுடன் எழுதப்பெற்றவை. அவரது 'அலையோசை' என்னும் புதினம் 'விடுதலைப் போராட்டம்' முழுவதையும் இந்தியச் சூழ்நிலையோடு ஒன்றுபடுத்தி விளக்குகிறது. டாக்டர் மு. வரதராசனுர் ஆக்கிய 'கள்ளோ காவியமோ', 'அல்லி', 'பெற்ற மனம்', 'நெஞ்சில் ஒரு முள்' முதலிய புதினங்கள் இனிய

எளிய செந்தமிழ் நடையில் இயன்றவை; ஆங்காங்கே ஆசிரியரின் அரிய கருத்துக்கள் கொண்டவை; மேனுட்டாரின் தற்போதைய புதினப் போக்கிற்கொப்ப உள வியல்முறை நிறைந்தவை. இத்தகைய புதினங்களால் தமிழ் விரைந்து வளர்கின்றது எனலாம்.

புதுவகை இலக்கியங்களுள் மற்ருென்று சிறுகதை யாகும். இது 19-ஆம் நூற்ருண்டில் அமெரிக்காவில் தொடங்கப்பெற்ற ஒரு புது இலக்கியம். நாளடைவில் இவ் விலக்கியம் உலக முழுதும் பரவிவிட்டது. இந்நூற்ருண்டில் தமிழில் சிறுகதை மிக விரைந்து வளர்ச்சி எய்தி யுள்ளது. புதினத்தின் சுருங்கிய வடிவமே சிறுகதை என நினைப்பது தவறு. சிறுகதை புதினத்தினும் முற்றிலும் வேருனது. புதினத்தில் பல நிகழ்ச்சிகள் பின்னிச் செல்லும்; விரிவான வருணனைகள் அமைந்திருக்கும். சிறுகதை குறிப்பிட்டதொரு செய்தியை அல்லது நிகழ்ச்சியை அல்லது மனநிலையை அல்லது மனமாற்றத்தை விளக்குவதாக அமைகிறது. அதன்கண் கூறப்படுவன வெல்லாம் ஆசிரியரின் முடிவான நோக்கத்தை விளக்குதற்குத் துணைசெய்வனவாக இருக்கவேண்டுமே அன்றி அதற்குப் புறமானதாக ஒன்றும் இருத்தல் கூடாது. ஒருமுறை அமர்ந்து படித்துவிடக்கூடிய அளவில் சிறுகதை அமைய வேண்டும். எட்கார் ஆலென் போ (Edgar Alen poe) என்பவர், “சிறுகதை என்பது உரைநடையைக் கொண்டதொரு கதை இலக்கியம். அஃது அரை மணி அல்லது ஒரு மணி நேரத்தில் படித்துவிடக்கூடிய அளவில் அமைந்ததாகும்” என்று கூறுகிருர். திரு. வ. வெ. சு. ஐயர் இயற்றிய ‘மங்கையர்க்கரசியின் காதல்’ முதல் தமிழ்ச் சிறுகதையாகும். புதுமைப்பித்தன் அவர்கள் சிறந்த சிறுகதைகள் இயற்றியுள்ளார். அவர்தம் சிறுகதைத் தொகுப்பு இரு பகுதியாக வெளியிடப்பட்டுள்ளது. திரு.

கு. பா. இராசகோபால் அவர்களின் சிறுகதைகளில் பல என்றும் நின்று நிலவும் தன்மையன. தற்போது தமிழில் வார இதழ்களிலும் மாத இதழ்களிலும் எண்ணிறந்த சிறு கதைகள் வெளியாகின்றன.

நாடகம் தனிச்சிறப்புடைய ஓர் இலக்கியம். புதினத் திற்குரியவையாகிய கதை, உரையாடல், நிகழ்ச்சிகள், நிகழும் இடம், காலம் முதலியவை நாடகத்திற்கும் உண்டு. எனினும், புதினத்தினும் நாடகம் வேருனது. புதினத் தில் பெரும்பாலும் ஆசிரியர் கதையைக் கூறிக்கொண்டு செல்வார். ஒருசில இடங்களிலே கதை உறுப்பினர்கள் உரையாடல் நிகழும். நிகழ்ச்சிகள் நிகழும் இடங்களைப் பற்றிய வருணனைகளும் விரிவாகவும் சுவையாகவும் புதினத்தில் அமைந்திருக்கும். ஆனுல், நாடகத்தில் கதை உறுப்பினர் தம் உரையாடல்களின் வாயிலாகவே கதை முழுமையும் நிகழும். நிகழ்ச்சிகள் நிகழும் இடம், காலம் இவற்றின் தன்மைகளைப் படிப்போர் கற்பனை செய்து கொள்ள வேண்டும்.

மிகப் பழங்காலத்தில் தமிழில் நாடக நூல்கள் இருந் தன என்பதைப் பழந்தமிழ் இலக்கியங்களிலிருந்து அறி கிருேம். இயல், இசை, நாடகம் என்ற முத்தமிழ் பகுப்பே அக்காலத்தில் நாடக நூல்கள் மிகுதியாக இருந்த உண் மையை உணர்த்துகின்றது. இடைக் காலத்தில் எப்படியோ நாடகம் அறவே மறைந்துவிட்டது. 19-ஆம் நூற்ருண்டில் தெருக்கூத்து நாடகங்கள் பல இயற்றப் பட்டன. பின்பு ஆங்கிலப் புலமை எய்திய தமிழறிஞர் சிலர் மேனுட்டு நாடக நூல்களைக் கற்கலாயினர். அதன் பயனுய் மேனுட்டு நாடக முறையில் நாடகம் எழுதும் முயற்சி எழுந்தது. திரு. சுந்தரம் பிள்ளை அவர்கள் சேக்ஸ்பியரின் நாடக முறையில் 'மனேன்மணீயம்' என்ற

தமிழ் நாடக நூலை இயற்றினர். இது லிட்டன் பிரபு எழுதிய 'The Secret Way' என்ற கதையைத் தழுவி எழுதப்பட்டதாகும். இந் நாடக நூல் ஐந்து அங்கங்கள் கொண்டது; இனிய எளிய செய்யுள் நடையில் அமைந்தது. இந் நாடகம் படித்து இன்புறற்கு ஏற்றது; நடித்தற்கு ஏற்றதன்று. அடுத்து சூரியநாராயண சாத்திரியார் அவர்கள் 'ரூபாவதி', 'கலாவதி', 'மான விஜயம்' என்ற மூன்று தமிழ் நாடகங்களை இயற்றினர். ரூபாவதியும், கலாவதியும் ஒவ்வொன்றும் ஐந்து அங்கங்களைக் கொண்டது. 20-ஆம் நூற்றாண்டில் மேனாட்டு முறையை யொட்டி நடிப்பதற்கென திரு. சம்பந்த முதலியார் அவர்கள் பல நாடகங்களை எழுதியுள்ளார். தற்போது தமிழில் நல்ல நாடக நூல்கள் மிகக் குறைவு. நல்லறிஞர்கள் இத் துறையில் முயன்று சிறந்த நாடக நூல்களை வெளியிடின் தமிழ் மேலும் ஆக்கமுறும்.

19-ஆம் நூற்றாண்டுவரை பழைய முறையிலேயே புராணம், கலம்பகம், பிள்ளைத்தமிழ், உலா முதலிய செய்யுள் இலக்கியங்கள் தோன்றின. அதன்பின்பு மேனாட்டவர் சார்பின் பயனாய்ப் புதுமுறையில் தமிழ்க் கவிதைகள் வெளிவந்தன. பெரும்பாலும் இலக்கியச் சொற்களை நீக்கி, வழக்கிலுள்ள சொற்களைக்கொண்டே அனைவரும் எளிதாகப் புரிந்துகொள்ளும்வண்ணம் கவிஞர்கள் பாடல்களை இயற்றத் தொடங்கினர். இயற்கைக் காட்சிகள், நீதி, சீர்திருத்தம், ஒழுக்கம், மொழிப்பற்று, அரசியல் முதலியவைகளைப் பொருளாகக் கொண்டு தனித்தனிக் கவிதைகள் எழலாயின. 19-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த திரு. வேதநாயகம் பிள்ளை அவர்கள் பல கீர்த்தனைகளை இயற்றினர். அவை பக்திச் சுவையோடு, நீதி, சமுதாயச் சீர்திருத்தம் முதலிய பொருள்களையும் கொண்டவையாய் விளங்குகின்றன.

திரு. வி. கோ. சூரியநாராயண சாத்திரியார் அவர்கள் ஆங்கிலத்திலுள்ள சானெட் (Sonnet) என்ற பாவகை முறையில் தமிழில் பல பாக்களை இயற்றினர். சானெட் என்பது ஒரு பொருளைப்பற்றிப் பதினன்கடி கொண்ட தொரு செய்யுள். அதன் முதற் பகுதியில் பொருளின் தோற்றுவாயும், இடையில் அதன் வளர்ச்சியும், கடையில் அப் பொருளின் முடிவும் அமைந்திருக்கும். இதே முறையில் சாத்திரியார் அவர்கள் ஒவ்வொரு பொருளைப்பற்றிப் பதினன்கடி கொண்ட நேரிசை ஆசிரியப்பா ஒவ்வொன்று எழுதியுள்ளார். இப் பாடல்களின் தொகுப்பு 'தனிப் பாசுரத் தொகை' என்ற நூலாக வெளியிடப்பட்டுள்ளது. ஜி. யு. போப்பையர் இப் பாடல்களின் சிறப்பை யுணர்ந்து அவற்றை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்தனர். கீழ்வரும் எறும்பைப் பற்றிய செய்யுள் அப் பாடல்களுள் ஒன்ரும்.

"என்னே ! எறும்பீர் ! எழிற்சிற் றெறும்பீர் !
கொன்னே யிராமற் கூடியு லாவுவீர் ;
கால முணர்ந்துநீர் ஏல உணவினை
முன்னரே நேடி மொய்ம்புறச் சேர்த்து
நன்னரின் புற்று நாடொறும் வாழ்வீர் ;
மக்களுட் பலர்நும் மாண்பினை அறியார்
தொக்கொரு வழியில் தொழிலுஞ் செய்யார்
மடியராய் நாளும் மடிவர் அந்தோ !
மாநுடர் உடலின் மன்னிற்(று) அழுக்கெனின்
ஓடிப் போந்துநீர் உறக்கடித்(து) அவர்தமை
யறிவுறுத் தாயிடை யாருயிர் இழப்பீர்
நும்மருள் என்னே நுவலுதற் பாற்றே ?
நல்லர சாளருள் நாண
எல்லியும் பகலும்நீர் இனிது முயல்வீரே !"

இதுபோன்று நாற்பத்துமூன்று பொருள்களைப்பற்றி நாற்பத்துமூன்று பாடல்கள் 'தனிப்பாசுரத் தொகையில்' உள்ளன.

இருபதாம் நூற்றுண்டில் சுப்பிரமணிய பாரதியாரின் பாடல்கள் தமிழ்க் கவிதையுலகில் மறுமலர்ச்சியை உண்டாக்கின. அடிமையிருளில் ஆழ்ந்துகிடந்த நம் மக்களுக்கு அவர்தம் நாட்டுப் பாடல்கள் வீரவுணர்ச்சி யூட்டி, அவர்களை விழிப்புறச் செய்தன. காலத்திற்கேற்றவாறு அவருடைய கவிதைகள் புதிய முறையில் அமைந்திருந்தன. யாவரும் புரிந்துகொள்ளக்கூடிய எளிய சொற்களாலேயே அவர் தம் பாடல்களைப் புனைந்தார். அப் பாடல்களின் சொல்லும் பொருளும் உணர்ச்சியூட்டும் தன்மையவாய் விளங்கின. இதனுல் அவை அனைவரையும் புத்துணர்ச்சி பெறும்படி செய்தன.

"புல்லடிமைத் தொழில் பேணிப்—பண்டு
போயின நாட்களுக் கினிமனம் நாணித்
தொல்லை இகழ்ச்சிகள் தீர—இந்தத்
தொண்டு நிலைமையைத் தூவென்று தள்ளி
வந்தே மாதரம் என்போம்—எங்கள்
மாநிலத் தாயை வணங்குதும் என்போம்"

இது பாரதியாரின் நாட்டுப் பாடல் ஒன்றின் இறுதிப் பகுதி. அடிமை மனப்பான்மையை அறவே அகற்ற வேண்டும் என்ற உணர்ச்சியை எத்துணை அளவு இது நம் உள்ளத்தே மிகுவிக்கின்றது என்பதை நோக்குமின்.

பாரதியார் நாட்டுப் பாடல்களேயன்றிச் சமூக வளர்ச்சியை வலியுறுத்தும் பாடல்கள், பக்திப் பாடல்கள், இயற்கை பற்றிய பாடல்கள் முதலியவைகளும் பாடியுள்ளார். அவரியற்றிய 'பாஞ்சாலி சபதம்' காவியத் துணுக்கு எனலாம். காதற்சுவை நிறைந்த அவர்தம் குயில் பாட்டில் ஆங்கிலப் பெருங் கவிஞராகிய ஷெல்லியின் மணம் வீசக் காணலாம்.

கவிமணி தேசிகவிநாயகம் பிள்ளை அவர்களும் தற்காலத்திற்கேற்பப் பல பொருள்களைப்பற்றிப் புதுமுறையில் பாக்கள் இயற்றிக் கவிதையுலகில் வான்புகழ் கொண்டுள்ளார். அவர்தம் பாக்களில் தெள்ளிய நடை சிறக்கக் காணலாம். சிறப்பாக அவர்தம் வெண்பாப் பாடல்கள் தற்காலச் சொற்றொடர்களுடையவையாயினும் புகழேந்திப் புலவரின் வெண்பாக்கள் போல ஓசை நயம் மிக்கு விளங்குகின்றன.

"வாணிகம் செய்வோம்; வயலிற் பயிர்செய்வோம்;
காணரிய கைத்தொழிலும் கண்டுசெய்வோம்–பேணிநம்
சந்தத் தமிழ்வளர்ப்போம்; தாய்நாட்டுக் கேயுழைப்போம்
சிந்தை மகிழ்ந்து தினம்"

இவ் வெண்பா கவிமணி அவர்கள் 'நாட்டுக்கே உழைப்போம்' என்ற தலைப்பில் இயற்றிய பாடல்களில் ஒன்று. இதன்கண் வெண்பாவுக்குரிய செப்பலோசை சிறந்து விளங்குவதை உணரலாம். அவர் இன்னும் எமெர்சன் (Emerson), பிலேக் (Blake), டென்னிசன் (Tennyson), சுவின்பர்ன் (Swinburne) முதலிய ஆங்கிலக் கவிஞர்களின் பாடல்களைத் தழுவிப் பல தமிழ்ப் பாடல்கள் இயற்றியுள்ளார். அப் பாக்களில் தமிழ் இனிமையும் ஆங்கில மணமும் விரவி விளங்குகின்றன.

பாரதிதாசன் இயற்றிய கவிதைகளும் புதுமுறையில் அமைந்து புத்துணர்ச்சி ஊட்டுவனவாய் உள்ளன. அவர்தம் கவிதைகளுள் சமுதாயப் புரட்சிக் கருத்துக்கள் பற்றிய பாடல்களும், தமிழ் ஆர்வமூட்டும் பாடல்களும், காதல்பற்றிய பாடல்களும் குறிப்பிடத் தகுவனவாம்.

"அண்டை இல்லத்தினிலே—என்
அன்பன் இருக்கின்றான்!

உண்ணும் அமுதிருந்தும்—எதிர்
உண்ண முடிந்ததில்லை !
தண்டமிழ்ப் பாட்டிருந்தும்—செவி
சாய்த்திடக் கூடவில்லை !
வண்மலர் சூடவில்லை—அது
வாசலில் பூத்திருந்தும் !
என்று சரோஜாவும்—பல
எண்ணிஎண்ணி அயர்வாள்''

காதலியின் வருத்தத்தைக் கூறும் இப் பாடற்பகுதி எளிய நடையில் அமைந்து கவிச்சுவை நிரம்பி விளங்குகிறது. இதுபோலவே அவர்தம் பாடல்கள் பல கவிநலம் நிரம்பியனவாய் உள்ளன.

இன்னும் தற்காலத்தில் பல இளங்கவிஞர்களின் புதுமுறைக் கவிதைகள் வார இதழ்களிலும், மாத இதழ்களிலும் வெளிவருகின்றன. இவற்றுல் தமிழ் விரைந்து ஆக்கமெய்துகிறது எனலாம்.

இதுவரை கூறியவாற்ருல் உரைநடை இலக்கியம், வரலாற்று நூல், விஞ்ஞான நூல், மொழிபெயர்ப்பு நூல், இலக்கிய ஆராய்ச்சி, மொழி நூல், புதினம், சிறுகதை, நாடகம், கவிதை முதலியவை தமிழில் தோன்றிய புதுமை இலக்கியங்கள் என அறிகிரும். இவையனைத்தும் பொதுவாக மேனுட்டவர் சார்பாலும், சிறப்பாக ஆங்கிலேயர் தொடர்பாலும் தொடக்கத்தில் தோற்றமெய்தி 19-ஆம் நூற்ருண்டிலும் 20-ஆம் நூற்ருண்டிலும் நன்கு வளர்ச்சியுற்றவையாகும். எனவே, இக் காலத்தைப் 'புதுமை இலக்கியக் காலம்' எனக் கொள்வது பொருந்தும்.

---

# 3

# நிகண்டுகள்

தமிழ்ச் சொற்கள் செய்யுள் வழக்கு, உலக வழக்கு என இருவகைப்படும். செய்யுள் வழக்காவது இலக்கியத்தில் வழங்கும் சொற்களாகும். உலக வழக்காவது பேச்சு மொழியாகும். பேச்சு மொழியினும் இலக்கியச் சொற்கள் வேறுபட்டவை. எனவே, இலக்கியச் சொற்கள் அனைத்தையும் மக்கள் தெரிந்திருக்க முடியாது. மேலும், பல இலக்கியச் சொற்கள் காலத்திற்குக் காலம் மாற்றம் அடைந்துள்ளன. பழைய சொற்களின் வடிவங்கள் மாறின ; சில சொற்கள் வழக்கு வீழ்ந்தன ; புதிய சொற்கள் புகுந்தன. இதனால் பண்டைத் தமிழ் இலக்கியத்தில் வழங்கிவந்த பல சொற்களுக்குப் பொருள் தெரிவது பிற்காலத்தவருக்குக் கடினமாக இருந்தது. இந் நிலையில் தான் நிகண்டுகள் தோன்றின எனலாம்.

தொல்காப்பியரும் தமக்கு முன்காலத்திலும், தம் காலத்திலும் வழங்கிய பல இலக்கியச் சொற்களைத் தம்

நூலில் இடையியல், உரியியல், மரபியல் ஆகிய இயல் களில் குறிப்பிட்டுள்ளார்.

நிகண்டு என்பதற்குத் தொகுப்பு என்பது பொருள். இது வடசொல். இதற்கு உரிச்சொல் அல்லது உரிச் சொல் பனுவல் என்ற வழக்கு முன்னர் தமிழில் இருந் தது. பவணந்தி முனிவர் தம் நன்னூலில் நிகண்டினை உரிச்சொல் என்றே குறிப்பிட்டுள்ளார்.

"பிங்கலம் முதலா நல்லோர்
உரிச்சொலின் நயந்தனர் கொளலே"

என்று அவர் கூறுகிறார். மயிலைநாதர் இச் சூத்திரத்தின் உரையில், 'பிங்கலம் முதலான உரிச்சொல் பனுவல்கள்' என்று எழுதுகிறார். இதனால் நிகண்டு, உரிச்சொல் பனுவல் என்றும் வழங்கப்பட்டது என்று தெரிகிறது. இத் தமிழ்ப் பெயர்கள் நாளடைவில் மறைந்து, நிகண்டு என்ற பெயரே நிலைத்துவிட்டது.

நிகண்டுகளுக்கெல்லாம் தொல்காப்பியமே வழிகாட்டி யாக அமைந்தது எனலாம். தொல்காப்பியத்திலுள்ள உரியியல் இலக்கியச் சொற்களின் தொகுப்பேயாகும். உரிச்சொல் என்பது செய்யுள் அல்லது இலக்கியத்திற் குரிய சொல் என்று பொருள்படும். "பெரும்பான்மையும் செய்யுட்குரியவாய் வருதலின் உரிச்சொல்லாயிற்று" என்று உரையாசிரியர் சேனாவரையர் கூறுகிறார். உரி யியல் இவ் வுரிச்சொற்களையே விளக்குகிறது. ஒரு பொருளைக் குறிக்கும் பலசொல், பல பொருளைக் குறிக் கும் ஒருசொல் ஆகியவை இவ் வியலுள் கூறப்பட் டுள்ளன.

"குருவுங் கெழுவும் நிறனாகும்மே"

இத் தொல்காப்பியச் சூத்திரம் குரு, கெழு, நிறம் ஆகிய மூன்று சொற்களும் ஒரு பொருளைக் குறிப்பதை உணர்த்துகின்றது.

" மதவே மடனும் வலியும் ஆகும்
மிகுதியும் வனப்பும் ஆகலும் உரித்தே "

மதவு என்ற சொல் மடன், வலி, மிகுதி, வனப்பு என்ற பொருள்களைத் தரும். இஃது ஒருசொல் பல் பொருள். இடைச்சொற்களின் பொருள்களை இடையியலில் தொல்காப்பியர் விளக்குகிருர். மரபியலில் இன்ன சொல் இதற்கு வழங்கவேண்டும் என்ற மரபினைக் கூறுகிருர். எடுத்துக்காட்டாகப் பறவையின் குழவியைப் பார்ப்பு அல்லது பிள்ளை என்றே கூறவேண்டும். குட்டி என்ருே குருளை என்ருே மகவு என்ருே கூறக்கூடாது.

" அவற்றுள்,
பார்ப்பும் பிள்ளையும் பறப்பவற் றிளமை "

என்பது தொல்காப்பியம். இவ்வாறு தொல்காப்பியர் இடையியல் உரியியல் மரபியல் ஆகிய இயல்களில் வகுத்த முறைகளை அடிப்படையாகக்கொண்டே நிகண்டுகள் தோன்றின.

இடைக்காலத்திலும் பிற்காலத்திலும் தோன்றிய நிகண்டுகள் பல. அவற்றுள் திவாகரம், பிங்கலம், சூடாமணி நிகண்டு, நாமதீப நிகண்டு, உரிச்சொல் நிகண்டு, கயாதரம், அகராதி நிகண்டு, நாநார்த்த தீபிகை முதலிய நிகண்டுகள் குறிப்பிடுதற்குரியவையாம்.

இந் நிகண்டுகளில் மிகவும் சிறந்தவை யென்று கருதப்பெறுவன திவாகரம், பிங்கலம், சூடாமணி நிகண்டு

ஆகிய இம் மூன்றுமேயாம். இம் மூன்று நிகண்டுகளும் மிகவும் பழைமையானவை.

திவாகரம் ஆதிநிகண்டு என்று கருதப்பெறுகிறது. திவாகரர் என்ற சமணப் புலவரால் இஃது எழுதப்பெற்றது. இதனை எழுத ஆதரவு அளித்தவன் சேந்தன் என்ற குறுநில மன்னனாவன். இதனால், இது சேந்தன் திவாகரம் என்று வழங்கும். இந் நூலின் ஒவ்வொரு தொகுதியின்பின் நூலாசிரியரையும் அவரை ஆதரித்த சேந்தனையும் புகழும் பாடல்கள் உள்ளன.

"வடநூற் கரசன் தென்தமிழ்க் கவிஞன்
கவியரங் கேற்றும் உபய கவிப்புலவன்
செறிகுணத் தம்பற் கிழவோன் சேந்தன்
அறிவு கரியாகத் தெரிசொற் றிவாகரத்துள்"

இப் பாடல் இந் நூலின் முதல் தொகுதிக்குப்பின் உள்ளது. இஃது இந் நூலைச் செய்த புலவரையும் அவரை ஆதரித்த சேந்தனையும் புகழ்வதைக் காண்க.

இதன் காலத்தைத் திட்டமாய் வரையறுத்துக் கூற முடியவில்லை. இது சுமார் 7 அல்லது 8-ஆம் நூற்றாண்டில் தோன்றியிருக்கலாம் என்று சிலர் கருதுகின்றனர்.

இந் நிகண்டு சூத்திர யாப்பில் அமைந்துள்ளது. தொல்காப்பியர் முறையைப் பின்பற்றித் திவாகரர் சூத்திரம் அமைத்துள்ளார். சில தொல்காப்பியச் சூத்திரங்களையும் இவர் தம் நூலுள் அமைத்துக்கொண்டுள்ளார்.

"அவற்றுள்,
அழுங்கல் இரக்கமும் கேடும் ஆகும்"

என்பது தொல்காப்பியச் சூத்திரம்.

" அழுங்கல் இரக்கம் கேடும் ஆகும்''

என்பது திவாகரம்.

தொல்காப்பியச் சூத்திரத்தை அப்படியே திவாகரர் அமைத்திருப்பதைக் காண்க. திவாகரர் அமைத்த முறையே பிற்கால நிகண்டுகளுக்கு அடிப்படையாய் இருந்தது. திவாகரம் பன்னிரண்டு பகுதிகளைக் கொண்டுள்ளது. அவையாவன, தெய்வப் பெயர்த் தொகுதி, மக்கட் பெயர்த் தொகுதி, விலங்கின் பெயர்த் தொகுதி, மரப் பெயர்த் தொகுதி, இடப் பெயர்த் தொகுதி, பல்பொருட் பெயர்த் தொகுதி, செயற்கை வடிவப் பெயர்த் தொகுதி, பண்புபற்றிய பெயர்த் தொகுதி, செயல் பற்றிய பெயர்த் தொகுதி, ஒலி பற்றிய பெயர்த் தொகுதி, ஒரு சொல் பல்பொருட் பெயர்த் தொகுதி, பல்பொருட் கூட்டத்து ஒருபெயர்த் தொகுதி என்பனவாம்.

தெய்வப் பெயர்த் தொகுதியில் சிவன், திருமால், பிரமன் முதலிய தெய்வப் பெயர்களோடு, நாள் கோள்களின் பெயர்களும், காலப் பெயர்ப் பருவப் பெயர்களும், மழை மேகம் முதலியவற்றின் பெயர்களும் சேர்க்கப்பட்டுள்ளன. திவாகரர் இயற்கையையும் தெய்வமாகக் கொண்டனர்போலும் !

'' ஆணியமும் இருதுவும் பருவமாகும்''

பருவப் பெயர்களைக் குறிக்கும் இச் சூத்திரம் தெய்வப் பெயர்த் தொகுதியில் உள்ளது. மக்கட் பெயர்த் தொகுதியில், சமணர், பௌத்தர், சேர, சோழ, பாண்டியர், ஐந்திணை மக்கள் முதலிய பெயர்களோடு, மக்களின் உறுப்புக்களுக்குரிய பெயர்களும் தொகுக்கப்பட்டுள்ளன. மிருகம், பறவை, ஊர்வன, நீர்வாழ்வன இவற்றின்

உறுப்புப் பெயர் முதலியவை விலங்குப் பெயர்த் தொகுதியிலும், மரம், செடி, கொடி, பூ, காய், கனி, தானிய வகை ஆகியவை மரப் பெயர்த் தொகுதியிலும், உலகம், நாடு, ஊர், மனை, மலை, ஆறு, நீர்நிலை முதலியவை இடப் பெயர்த் தொகுதியிலும் உள்ளன. பல்பொருட் பெயர்த் தொகுதியில் பொன், மணி, நறுமணப்பொருள், உணவு வகை ஆகிய பெயர்கள் கூறப்பட்டுள்ளன. செயற்கை வடிவப் பெயர்த் தொகுதியில் ஆயுதங்கள், ஆபரண வகை, உடை வகை, ஊர்தி வகை, விளையாட்டுக் கருவிகள் முதலியவற்றின் பெயர்கள் உள்ளன. வட்ட வடிவு, திரள் வடிவு முதலியவற்றின் பெயர்களும் பெருமை நுண்மை முதலிய உணர்விற்குப் புலப்படும் பெயர்களும், குணத் தொடர்புடைய பெயர்களும் பண்புபற்றிய பெயர்த் தொகுதியில் உள்ளன. செயல்பற்றிய பெயர்த் தொகுதியில் செப்புதல், கொண்டாடல், கலத்தல், முகத்தல் போன்ற வினைப் பெயர்களும், ஒலிபற்றிய பெயர்த் தொகுதியில் சொல் வகை, பா வகை, யாழ் வகை, இசை வகை முதலியனபற்றிய பெயர்களும் கூறப்பட்டுள்ளன. ஒரு சொல் பல்பொருட் தொகுதியாகிய பதினோராந் தொகுதியில் ஒரு சொல்லுக்குரிய பொருள்கள் எல்லாம் விளக்கப் பட்டுள்ளன.

"நளியே பெருமையும் சீதமும் செறிவும்"

என்பது இத் தொகுதியிலுள்ள ஒரு சூத்திரம். இது நளி என்ற சொல்லுக்குரிய பல பொருள்களை விளக்குகிறது. இறுதித் தொகுதியாகிய பல்பொருட் கூட்டத்து ஒரு பெயர்த் தொகுதியில் இரு சுடர், முக்குணம் என்பன போன்று, எண்ணால் வரும் தொகைப் பொருள்கள் விளக்கப்பட்டுள்ளன.

"மனம்புத்தி யாங்காரம் சித்தம் நாற்கரணம்"

என்பது இத் தொகுதியிலுள்ள சூத்திரங்களில் ஒன்று.

நாற்கரணங்களாவன, மனம், புத்தி, யாங்காரம், சித்தம் ஆகும் என்பதை இச் சூத்திரம் கூறுகிறது.

சேந்தன் திவாகரத்திற்குப் பின் பிங்கலந்தை நிகண்டு தோன்றியது. இது பிங்கலர் என்பவரால் இயற்றப்பெற்றது. இந் நூலின் சிறப்புப்பாயிரத்தில்,

"செங்கதிர் வரத்தால் திவாகரன்
பயந்த பிங்கல முனிவன்
எனத் தன்பெயர் நிறீஇ"

என்று கூறப்பட்டுள்ளது. இதைக்கொண்டு பிங்கலர் திவாகருடைய மகன் என்று சிலர் கூறுவர். ஆனால், திரு. கே. எஸ். சீனிவாசப் பிள்ளை அவர்கள் பிங்கலர் திவாகரருக்கு மிகவும் பிற்பட்ட காலத்தில் இருந்தவராவர் என்பர். இதன் காலத்தைத் திட்டமாகக் கூறுவதற்கில்லை. நன்னூல் 459-ஆவது சூத்திரத்தில் பிங்கல நிகண்டு குறிப்பிடப்பட்டுள்ளது.

"இன்னது இன்னுழி யின்னணம் இயலும்
என்றிசை நூலும் குணிகுணப் பெயர்கள்
சொல்லாம் பரத்தலிற் பிங்கல முதலா
நல்லோர் உரிச்சொலின் நயந்தனர் கொளலே"

என்பது அச்சூத்திரம். இதனால், பிங்கலந்தை நன்னூலின் காலமாகிய கி. பி. 13-ஆம் நூற்றுண்டிற்கு முற்பட்டது என்று தெரிகிறது. ஆனால், எவ்வளவு காலத்திற்கு முந்தியது என்பது தெரியவில்லை. சூடாமணி நிகண்டின் சிறப்புப்பாயிரத்தில், "சிறப்பின் மிக்க பிங்கலர் உரை நூற்பாவிற் பேணினர் செய்தார்" என்று கூறப்பட்டுள்ளது. பிங்கலந்தை ஒரு சிறந்த நிகண்டு என்பதைச்

" சிறப்பின் மிக்க பிங்கலர் " என்ற அடைமொழியால் அச் சிறப்புப்பாயிரம் குறிப்பிடுகிறது.

பிங்கலந்தை அளவில் திவாகரத்தினும் பெரியது. திவாகரத்தில் இல்லாத பல சொற்கள் பிங்கலந்தையில் சேர்க்கப்பட்டுள்ளன. இதுவும் சூத்திர யாப்பில் இயற்றப் பட்டுள்ளது. திவாகரத்தின் பன்னிரண்டு பகுதிகளைப் பிங்கலர் பத்துப் பகுதிகளாக மாற்றி அமைத்துள்ளார். ஒவ்வொரு பகுதியும் வகை எனப்படும். திவாகரத்தில் தெய்வப் பெயர்த் தொகுதியில் உள்ளவற்றைப் பிங்கலர் விரித்து வான் வகை, வானவர் வகை என இரு பகுதி களாக வகுத்துள்ளார்; மக்கட்பெயர்த் தொகுதியை ஐயர் வகை, ஆடவர் வகை என இரு பகுதிகளாக்கிப் பல சொற்களைச் சேர்த்துள்ளார். இடப்பெயர்த் தொகுதியில் உள்ளனவற்றை அவனி வகை என்ற பகுதியில் கூறு கிறார். பல்பொருட் பெயர்த் தொகுதியையும், செயற்கை வடிவப் பெயர்த் தொகுதியையும் இணைத்துப் பல சொற் களைக் கூட்டி அநுபோக வகை என்ற ஆறுவது பகுதியை அமைத்துள்ளார். பல்பொருட் பெயர், செயற்கை வடிவப் பெயர், பண்புபற்றிய பெயர், செயல்பற்றிய பெயர் ஆகிய இத் தொகுதியிலுள்ளவற்றைச் சேர்த்துப் பண்பிற் செயலிற் பகுதி வகை என்று ஏழாம் பகுதியில் கூறியுள்ளார். விலங்கின் பெயர்த் தொகுதி என்பதை மாப்பெயர் வகை என்றும் மரப்பெயர்த் தொகுதி என் பதை மரப்பெயர் வகை என்றும் பெயர் மாற்றி அமைத் துள்ளார்; பத்தாவது பகுதியாக ஒருசொல் பல்பொருள் வகையைக் கூறியுள்ளார். இதுவே ஏனைய பகுதிகளினும் சிறப்பாக வேண்டப்படுவது. இதன்கண் அகர வர்க்கம், ககர வர்க்கம், சகர வர்க்கம் என எழுத்துக்களின் முறைப் படி சொற்கள் அமைக்கப்பட்டுள்ளன. இதனால், சொல்லை உடனே கண்டுபிடிப்பது எளிதாகிறது. திவாகரத்தில்

கூறப்படும் பல்பொருட் கூட்டத்து ஒருபெயர்த் தொகுதி பிங்கலந்தையில் இல்லை.

அடுத்தபடியாகச் சிறப்புவாய்ந்த நிகண்டு சூடாமணி நிகண்டு ஆகும். இதுவே பிற்காலத்துப் பெருவழக்குப் பெற்றுப் பயிலப்பெற்றது. இதனை இயற்றியவர் மண்டல புருடர். இவர் தொண்டைமண்டலத்தைச் சேர்ந்தவர் என்பது, 'நிகண்டு சூடாமணி தானுரைத்த, மண்டலவன் குடிகொண்டது நீடுதொண்டை மண்டலமே" என்னும் தொண்டைமண்டலச் சதகத் தொடரால் அறியலாம். இவர் சமண சமயத்தைச் சார்ந்தவர். இவர் இயற்றிய நூலுக்குச் சூடாமணி நிகண்டு என வழங்கினும் இவர் அதற்கு இட்ட பெயர் 'நிகண்டு சூடாமணி' என்பதாகும். நிகண்டுகளிற் சிறந்தது என்பது இதன் பொருள். 'மன்னிய நிகண்டு சூடாமணி யென ஒன்றுரைப்பன்' என இவ்வாசிரியரே பாயிரத்தில் கூறியுள்ளார். இவருடைய ஆசிரியர் குணபத்திரர் என்பவர் ஆவர். அவருடைய ஆணைப்படி மண்டலபுருடர் முன்னூல்களான திவாகரம், பிங்கலந்தை ஆகியவைகளை ஆராய்ந்து சூடாமணி நிகண்டைச் செய்தார். இச் செய்தி இந் நூல் பாயிரத்தில் கூறப்பட்டுள்ளது. கொடைமடம் என்பதற்குப் பொருள் கூறும் செய்யுளில் இவர்,

"கொடிமன்னர் வணங்குந் தாளான்
கிருட்டிணராயன் கைபோல்
கொடைமடம் என்பதம்ம
வரையாது கொடுத்தலாமே"

என்று கூறியுள்ளார். இதனின்றும் இவர் கிருஷ்ணராயன் என்ற அரசன் காலத்தில் இருந்தவர் என்பது விளங்குகிறது. இங்கே குறிக்கப்பெற்ற கிருஷ்ணராயன் 9-ஆம் நூற்றாண்டில் ஆட்சிபுரிந்த இராஷ்டிரகூட அரச

ஞகிய இரண்டாம் கிருஷ்ணராயனைக் குறிக்கும் என்றும், இதனுல் சூடாமணி நிகண்டின் காலம் 9-ஆம் நூற்ருண்டேயாகும் என்றும் சிலர் கூறுவர். வேறு சிலர் மண்டலபுருடரால் கூறப்பெற்ற கிருட்டிணராயன் 16-ஆம் நூற்ருண்டில் ஆட்சிபுரிந்த விசயநகர மன்னனுகிய கிருஷ்ணதேவராயரே என்று கொண்டு சூடாமணி நிகண்டு 16-ஆம் நூற்ருண்டில் எழுதப்பெற்றது என்பர்.

இது விருத்தப் பாக்களால் இயற்றப்பெற்றுள்ளது. திவாகரமும் பிங்கலமும் சூத்திரயாப்பில் இயற்றப் பெற்றிருத்தலால் அச் சூத்திரங்கள் அனைத்தையும் நினைவில் கொள்வது கடினம். சூடாமணி நிகண்டின் விருத்தச் செய்யுட்கள் எதுகை, மோனை நயங்களோடு அமைந்து மனப்பாடம் செய்வதற்கு எளிமையாக உள்ளன. இதனுலேயே பிற்காலத்தில் இது பலராலும் பயிலப்பெறும் சிறப்பு வாய்ந்ததாக விளங்கிற்று. இது 1125 விருத்தங்கள் கொண்டது என்பது,

"நிகண்டு சூடாமணியின் நின்ற முறையே
அகன்ற விருத்தங்கள் ஆய்ந்த—புகன்றவெலாம்
ஈரைஞ்ஞூற்று ஈரைம்பான் ஈரைந்து மூவைந்தும்
சோர்வின்றி ஆய்ந்த தொகை"

என்ற ஒரு பழம் வெண்பாப் பாடலால் தெரிகிறது. ஆனுல், இப்போதுள்ள அச்சுப் பிரதிகளில் 1195 விருத்தங்கள் உள்ளன. அதிகமான 70 பாடல்கள் பிற்காலத்தில் சேர்க்கப்பட்டிருத்தல் வேண்டும்.

திவாகரத்திலுள்ள பன்னிரண்டு தொகுதிகளையும் அம் முறைப்படியே மண்டலபுருடர் சூடாமணி நிகண்டில் அமைத்துள்ளார். இந் நிகண்டு சொற்பொருள் கூறுவதாய் இருப்பினும், இதிலுள்ள விருத்தப் பாடல்களில்

செய்யுள் நலம் கற்போர்க்குப் பெரிதும் இன்பம் பயப்ப தாய் உள்ளது. சான்ருக, பாலே நிலம் என்பதற்கு வறண்ட நிலம் என்று நேர்பொருள் கூறுவதற்குப் பதிலாக ஓர் உவமைவாயிலாக அந் நிலத்தை இந் நிகண்டு விளக்குகிறது.

“நீடிய கொடுங்கோன் மன்னர்
நெடுங்குடைக் கீழ்வாழ் கின்ற
பாடிலாக் குடிகள் போலப்
படுநிலம் பாலே யாமே”

‘கொடுங்கோல் மன்னர் குடைக்கீழ் வாழ்கின்ற குடிகள் துன்புறுவதுபோன்று கொடுமை மிக்கது பாலே நிலம்’ என்பது இவ்வடிகளின் பொருள். இவ்வாறே சொற்களேப் பல அடைமொழிகளாலும் உவமையாலும் இந் நிகண்டு விளக்குவதால் இதன்கண் சுவை நிரம்பியுள்ளது.

சூடாமணி நிகண்டைப்போலவே பன்னிரண்டு தொகுதிகளேயும் உடைய நிகண்டுகள் பல எழுந்தன. அவை 11-ஆம் தொகுதியாகிய ஒருசொல் பல்பொருட் தொகுதியைச் செப்பம் செய்ய முயன்றன. அவற்றுள் முதலாவதாகக் குறிப்பிடத்தக்கது உரிச்சொல் நிகண்டு என்பதாகும். இது வெண்பாப் பாடல்களால் அமைந்த ஒரு சிறு நூல். வெண்பாவில் அமைதற்குத் தக்கபடி இதில் பல்பொருட் சொற்கள் கொள்ளப்பட்டுள்ளன. இதைத் தவிர இதன்கண் வேறு சிறப்பியல்பு ஒன்றும் குறிப்பிடுதற்கில்லே.

கயாதரம் என்பது மற்ருெரு நிகண்டாகும். இந் நூலாசிரியர் கயாதரர் என்பாராவர். அவருடைய பெயரே இந் நூலுக்கு அமைந்து கயாதரம் என்ருயிற்று. கயா

தரர் அந்தணர் மரபில் தோன்றியவர்; சிவபக்தர்; 'தேவை' என்னும் இராமேச்சுரத்தில் வாழ்ந்தவர். வடமொழியிலும் தென்மொழியிலும் வல்லவர். இச் செய்திகள் இந் நூலிலிருந்தே அறியக்கிடக்கின்றன. இந் நூலின் காலத்தைத் திட்டமாக வரையறுத்துக் கூறுதற்கில்லை. இந் நூல் சுமார் கி. பி. 1450-இல் தோன்றியிருக்கலாம் என்று எஸ். வையாபுரிப்பிள்ளை அவர்கள் கருதுகிருர்கள்.

இந் நூல் தெய்வப் பெயரியல் முதலாக ஒருசொற் பல்பொருளியல் ஈருகப் பதிஞெரு இயல்களைக் கொண்டுள்ளது. இது கட்டளைக் கலித்துறைச் செய்யுட்களால் இயன்றுள்ளது. இச் செய்யுட்கள் இனிய ஓசையும், எதுகை, மோனை நயங்களும் உடையவாய்க் கற்போர்க்குப் பெருவிருந்தாய் உள்ளன. இந் நூல் முழுமையும் அந்தாதித் தொடையில் அமைந்திருப்பது இதன் தனிச் சிறப்பாகும். தொடர்ச்சியாகச் செய்யுட்களை நினைவில் இருத்துதற்கு அந்தாதித் தொடை பெரிதும் உதவுவதாகும். திவாகரம் அச்சுப்பிரதியில் பிழைபடக் காணப்படும் சில சொற்கள் கயாதர நிகண்டில் திருத்தமுறக் காணப்படுகின்றன. 'பாரின் மிசையோன்' என்பது புத்தனுக்குரிய பெயராகத் திவாகரம் அச்சுப்பிரதியில் தவருக உள்ளது. கயாதரத்தில் இப்பெயர் 'பாரமிதையவன்' என்று காணப்படுகின்றது. 'பாரமிதையவன்' என்பதே புத்தனுக்குரிய பெயர்களுள் ஒன்று. 'பைம்மையுங் கௌந்தியும் அருந்தவப் பெண் பெயர்' என்பது திவாகரம் அச்சுப்பிரதியிற் கண்ட பாடம். பம்மை, கவுந்தி என்ற சொற்களே பைம்மை, கௌந்தி என்று தவருகத் திவாகரத்தில் காணப்படுகின்றன. மேலும், இவைகள் சமணசமயப் பெண் பெயர்கள் என்பது திவாகரம் அச்சுப்பிரதியில் காணப்படவில்லை. கயாதரத்தில்

இப் பிழைகள் நீங்கி 'கவுந்தியும் பம்மையும் ஆருகதத் தவப் பெண்' எனத் திருத்தமுறக் காணப்படுகிறது. இவ்வாறு கயாதரம் ஒரு சிறந்த நிகண்டாக விளங்கு கிறது.

இதற்குப் பின்னர் தோன்றிய நிகண்டு பாரதி தீபம் என்பது. இதுவும் கட்டளைக் கலித்துறைச் செய்யுளால் அமைந்தது. இது அடைமொழியில்லாமல் பொருட் பெயர்களைத் தொகுத்துக் கூறுவதால் எளிதில் பெயர் களின் பொருள்களை அறியமுடிகிறது.

ஆசிரிய நிகண்டு என்பது மற்றெருரு நிகண்டாகும். ஆண்டிப் புலவர் என்பவர் இதன் ஆசிரியர். இந் நூல் ஆசிரிய விருத்தத்தால் அமைந்து பொருட்பெயர்களை மிகுதியாகக் கொண்டு எளிய நடையில் அமைந்துள்ளது. இதன் பதிஞேராந் தொகுதியில் ஒவ்வொரு சொல்லுக் குரிய பல பொருள்களும் எண்ணுல் வரையறுக்கப்பட் டுள்ளன. இஃது இந் நிகண்டின் தனிச் சிறப்பாகும்.

திவாகரம், சூடாமணி நிகண்டு ஆகியவற்றிலுள்ள பன்னிரண்டு தொகுதிகளையும் மூன்று தொகுதிகளில் அடக்கி ஒவ்வொரு தொகுதியையும் தனித்தனியாக விரித் துக் கூறும் நிகண்டுகள் பிற்காலத்தில் தோன்றின. அத் தொகுதிகளாவன: ஒன்று, ஒருபொருட் பல்பெயர்த் தொகுதி. இஃது ஒரு பொருளுடைய பல பெயர்களைத் தொகுத்துக் கூறுவது. இரண்டாவது, ஒருசொல் பல் பொருட் பெயர்த் தொகுதி. இஃது ஒரே சொல்லுக்குரிய பல பொருள்களையும் கூறுவதாகும். மூன்ருவது, பல் பொருட் கூட்டத்து ஒரு பெயர்த் தொகுதி. இஃது இரு வினை, முத்தீ, நாற்படை, ஐந்திணைபோன்ற தொகைப் பெயர்களைக் கூறுவது.

நாமதீப நிகண்டு ஒரு பொருள் தரும் பல சொற்களைத் தொகுத்துக் கூறுகிறது. இது வெண்பா யாப்பினால் இயன்றது. உயர்திணைப் படலம், அஃறிணை உயிர்ப் பொருட் படலம், அஃறிணை உயிரில் பொருட் படலம், குணநாமப் படலம் எனும் நான்கு பெரும் பிரிவுகளையும், வர்க்கம் என்னும் உட்பிரிவுகளையும் இந் நூல் கொண்டுள்ளது. 800 செய்யுட்களில் சுமார் 12,000 சொற்களுக்கு இதன்கண் பொருள் கூறப்பட்டுள்ளன. இந் நிகண்டை இயற்றியவர் கல்லிடைக்குறிச்சியில் தோன்றிய சிவசுப்பிரமணியக் கவிராயர் என்பவராவர்.

பல்பொருட் கூட்டத்து ஒருபெயர்ப் பொருள்களை விளக்கிக் கூறுவது "தொகை நிகண்டு" என்பது. நாமதீப நிகண்டை இயற்றிய சுப்பிரமணியக் கவிராயரே இதனையும் இயற்றினார் என்பர்.

ஒருசொல் பல்பொருள் மட்டும் கூறும் நிகண்டுகள் பல எழுந்தன. அவற்றுள் அகராதி நிகண்டு என்பது ஒன்று. இதனை கி. பி. 1594-இல் சிதம்பரரேவண சித்தர் என்பவர் இயற்றினார். இது 3368 சொற்களின் பொருள்களை அகரவரிசையில் கூறுகிறது. இதில் முதல் எழுத்து மட்டும் அகராதியில் உள்ளதே தவிர இரண்டாம் எழுத்து முதலியன அம்முறையில் இல்லை. அகராதி என்ற பெயரை முதன்முதல் குறித்தவர் ரேவண சித்தரேயாவர்.

அரும்பொருள் விளக்க நிகண்டு என்பதும் ஒரு சொல் பல்பொருளைக் கூறும் நூலாகும். இதனை இயற்றியவர் அருமருந்தைய தேசிகர். இந் நிகண்டு 700 விருத்தங்களில் 3200 சொற்களுக்குப் பொருள் கூறுகிறது. கி. பி. 1780-இல் கல்லிடைக்குறிச்சி சுவாமிநாத கவிராயர் இயற்றிய பொதிகை நிகண்டு என்பதும்

ஒருசொல் பல்பொருள் கூறுவதாகும். இவ்வகையைச் சார்ந்த மற்ருெரு குறிப்பிடுவதற்கு உரிய நிகண்டு நாநார்த்த தீபிகை என்பது. இந் நிகண்டை இயற்றியவர் முத்துசாமிப் பிள்ளை என்பவராவர். இவருடைய மருக ரான சுவாமிநாதப் பிள்ளை என்பவர் இந் நூலுக்குச் சிறப்புப்பாயிரம் எழுதியுள்ளார். இது 19-ஆம் நூற்ருண் டில் இயற்றப்பட்டது. இது 1102 விருத்தங்களில் 5452 சொற்களுக்குக் ககர முதல் னகர ஈற்று எதுகை முறை யில் பொருள் கூறுகிறது. வடசொற்களின் விளக்கம் இதன்கண் மிகுதியாக உள்ளது.

இவ்வாறு, ஒருசொல் பல்பொருள் நிகண்டுகளில் நாளடைவில் சொற்பெருக்கம் மிகுந்துள்ளது. தற்கால அகராதிகள் அனைத்தும் இந் நிகண்டுகளின் வளர்ச் சியேயாம்.

---

# 4

# இலக்கியம்

இலக்கியம் பெரிதும் பயனளிக்கும் பெருமையுடைய நூலாகும். ஆனால், பயனளிக்கும் நூல்கள் அனைத்தும் இலக்கியமாகா. சான்றாகப் பஞ்சாங்கம், இருப்புவழிக் காலஅட்டவணை (Railway Guide) இன்னோரன்னவையும் பயனளிப்பனவேயாம். ஆனால், அவை இலக்கியங்களெனக் கொள்ளப்பெறா. அவை சிறிது காலத்திற்கே பயன்தருபவையாம். சட்ட நூல்கள், வரலாற்று நூல்கள், நிலவியல் நூல்கள், விஞ்ஞான நூல்கள் இன்னோரன்னவை நின்று பயனளிக்கும் நூல்களாம். அங்ஙனமாயின், அவை இலக்கியங்களாகுமோ? அவற்றை இலக்கியங்களாகக் கொள்வதில்லை அல்லவா? பின்னை, இலக்கியமாவது யாது? இலக்கியம் பயில்தோறும் சுவைக்கிறது. ஏனைய நூல்களுக்கு அத் தன்மை இல்லை. இலக்கியத்திற்கே யுரிய தனிப்பெருந் தன்மை அது. வேதியியல் (Chemistry), பொருளியல் (Physics), நிலவியல் (Geology) முதலான நூல்களை ஒருமுறையோ இருமுறையோ

படித்து அவற்றின்கண் உள்ள செய்திகளையும் கருத்துக்களையும் உண்மைகளையும் அறிந்துகொண்ட பின்னர் அவற்றை மேலும் படிப்பதற்கு நம்கண் விழைவு ஏற்படுவதில்லை. ஆனால், இலக்கியங்களை நாம் படிக்குந்தோறும் படிக்குந்தோறும் இன்பத்துள் ஆழ்கிறோம்; பயிலப் பயிலக் கருத்தின் ஆழமும் நுட்பமும் நமக்குப் புலனாகின்றன. இலக்கியத்தை முதன்முறை படிக்கும் போது பெறும் இன்பத்தினும் அடுத்தடுத்துப் படிக்கும் போது அவ் வின்பம் பெருகிக்கொண்டே போகிறது. படிக்கப்படிக்க இலக்கியத்தின்பால் விருப்பு மிகுகிறதேயன்றி அதன்பால் சிறிதும் வெறுப்புத் தோன்றுவதில்லை. ஏனைய நூல்களுக்கு இதுபோல இன்பத்தையும் விழைவையும் மிகுவிக்கும் ஆற்றல் இல்லை. இலக்கியம் மட்டும் இந் நீர்மையைப் பெறுவ தெங்ஙனம்? இலக்கியத்தைப் படிக்குங்கால் நம் உள்ளம் உணர்ச்சி வெள்ளத்துள் ஆழ்கிறது. அஃதாவது, இலக்கியம் நம் உள்ளுணர்ச்சியைப் பெருக்குவிக்கிறது. அதைப் படிக்குந்தோறும் நாம் உணர்ச்சிவயப்படுவதால் அஃது என்றும் நமக்குத் தெவிட்டாத இன்பத்தை நல்குகிறது.

இலக்கியம் மட்டும் எங்ஙனம் உணர்ச்சியை மிகுவிக்கும் ஆற்றல் எய்தியுள்ளது என்பதை நாம் நோக்க வேண்டும். இலக்கியத்தில் அமைந்துள்ள கவிஞனின் கற்பனைகளே உணர்ச்சிப் பெருக்கிற்குக் காரணமாம். முல்லை மலர்ந்திருக்கிற காட்சியை நாம் காண்கிறோம். "முல்லை மலர்ந்திருக்கிறது" என்றே நாம் கூறுவோம். ஆனால், கவிஞன் அதை, "முல்லை சிரிக்கிறது" என்று தன் கற்பனையோடு அமைத்து விளக்குவான். முல்லை மலர்ச்சியை அவன் அதன் சிரிப்பாகக் கற்பனை செய்கிறான். அக் கற்பனை நம் உள்ளுணர்ச்சியை எழுப்பி நம்மை அம் மலரழகிலே ஈடுபடச் செய்கிறது.

கோவலன் கண்ணகியோடு மதுரைமாநகரை அணு கினன். அந்நகரின் மதில்மீது நாட்டப்பெற்ற நெடுங் கொடிகள் காற்றினுல் அசைந்தாடின. அக் காட்சி கோவல னேயும் கண்ணகியையும் அந் நகரின்கண் வரவேண்டாம் என்று அக் கொடிகள் தம் கைகளால் தடுப்பனபோல இருந்தது என்று கவி கூறுகிருர். கோவலன் கள்வன் என்று குற்றஞ் சாற்றப்பெற்றுப் பாண்டிய மன்னனுல் கொலேயுண்டனன் அல்லனே? அவன் மதுரைக்குள் வந்தால் அவனுக்கு அப் பெருந்தீங்கு நேரும் என்பதை அக் கொடிகள் முன்னதாகவே உணர்ந்து அவனே அந் நகர்க்குள் வரவேண்டாம் என்று தடுப்பனபோல இருந் தது என்று அக் கொடிகள் ஆடிய காட்சியை இளங்கோ வடிகள் கற்பனே செய்கிருர்.

> "போருழுந் தெடுத்த ஆரெயில் நெடுங்கொடி
> வாரலென் பனபோல் மறித்துக்கை காட்ட"

*(சிலப். புறஞ். 189-190)*

கொடி அசைந்தாடும் இக் காட்சியைக் கம்பர் மற்ருெரு வகையாகக் கற்பனே செய்துள்ளார். இராமன் கோசிக முனிவனேடும் தன் இளவல் இலக்குமணனேடும் மிதிலேயை நோக்கிச் சென்றனன். அந் நகரின் உயர் மாடங்களின் மீதிருந்த கொடிகள் ஆடிய காட்சி இராமனே விரைவில் அந் நகருக்குள் வருமாறு அழைப்பதுபோன் றிருந்தது என்பர் கம்பர். இராமன் இன்னுயிர் மனேவி யாதற்குரிய சீதை அந் நகர்க்கண் இருந்ததால் விரைவில் வந்து அவளேத் திருமணம் செய்துகொள்ளுமாறு அந் நகர் தன் கைகளே நீட்டி இராமனே அழைப்பதுபோன் றிருந்தது என்று அக் காட்சியைக் கற்பனே செய்கிருர் கவியரசர்.

"மையறு மலரின் நீங்கி
யான்செய்மா தவத்தின் வந்து
செய்யவள் இருந்தாள் என்று
செழுமணிக் கொடிகள் என்னும்
கைகளை நீட்டி அந்தக்
கடிநகர் கமலச் செங்கண்
ஐயனை ஒல்லை வாஎன்
றழைப்பது போன்ற தம்மா"

*(கம்பராமாயணம் மிதிலை. 1)*

திருத்தக்கதேவர் கற்பனையில் கொடியாடும் காட்சி இன்னொரு வகையாக உருவெடுக்கிறது. வித்தியாதரன் மகளாகிய காந்தருவதத்தையை யாழ்ப் போட்டியில் வெல்பவனுக்கு அவளைத் திருமணம் செய்துகொடுப்பதாக அவள்தன் வளர்ப்புத் தந்தை சீதத்தன் என்பான் எங்கும் அறிவித்தான்; அவ் யாழ்ப் போட்டிக்கென ஒரு மண்டபம் அமைத்தான். அம் மண்டபத்தின்மீது ஆடிய கொடியின் அரிய காட்சியை,

"முழங்குதிரை வேலியினி னில்லையென மொய்கொண்
டெழுந்து கொடி யாடும்"

*(சிந்தாமணி-597)*

எனத் திருத்தக்கதேவர் பாடுகிறார். கடலால் சூழப்பட்ட இவ் வுலகில் அம் மண்டபத்திற்கு நிகரான வேறொரு மண்டபம் எங்கும் இல்லை எனப் பெருமிதத்தோடு அம் மண்டபத்தின் மீதிருந்த கொடி ஆடிற்று.

இவ்வாறு, கொடி அசைந்தாடுவதாகிய ஒரே காட்சி கவிஞர்கள் கற்பனையில் வெவ்வேறு வகையாக உருவெடுத்து நம் உள்ளத்துள் உணர்வைப் பெருக்கி இன்பத்துள் ஆழ்த்துகிறது.

இலக்கியத்தில் பல்சுவை நிகழ்ச்சிகளும் பொருந்தி யிருப்பதால் அது நனிநயம் பயப்பதாகிறது. அச்சுவை களைத் தொல்காப்பியர் எட்டாக வகுத்துள்ளார். அவை, நகை, அழுகை, இளிவரல் (இழிபு), மருட்கை (வியப்பு), அச்சம், பெருமிதம் (வீரம்), வெகுளி, உவகை என்பன வாம். இவற்றுள் ஒன்றோ பலவோ இலக்கியத்தில் அமையும்.

தலைவன் தன் தலைவியை மகிழ்விப்பதன்பொருட்டு, "எல்லோரையும்விட உன்பால் எனக்குக் காதல் மிகுதி" என்றான். அதைக்கேட்டதும் தலைவி, "எல்லோரையும் விட என்னை மிகுதியாகக் காதலிக்கிறீர்களா?" என்று சொல்லி மனம்வெதும்பி ஊடல்கொண்டாள். 'தன்னைப் போல் தலைவனுக்கு வேறு காதலியர் உள்ளனர்போலும்! அதனால்தான், அவர்கள் எல்லோரினும் தன்னை மிகுதி யாகக் காதலிப்பதாகத் தலைவன் கூறினன்' என்று தலைவி கருதி ஊடினாள்.

"யாரினுங் காதலம் என்றேனா ஊடினாள்
யாரினும் யாரினும் என்று"

என்ற திருக்குறளில் இன்பச் சுவை மலிந்திருப்பதை நோக்குக! தொல்காப்பியத்தின்படி இஃது உவகைச் சுவையாகும்.

சச்சந்தன் என்னும் வேந்தனை அவன்தன் முதல் அமைச்சன் கட்டியங்காரன் என்பவன் எதிர்த்துக் கொன் றனன். சச்சந்தனின் தேவியாகிய விசயை என்பாள் மயிற்பொறியில் ஏறி அரண்மனையினின்றும் தப்பிச் சென் றாள். அம்மயிற்பொறி அவ்வூர்ச் சுடுகாட்டில் இறங்கியது. அங்கே அவள் ஓர் ஆண்மகவைப் பெற்றாள். பல நலங் களுடன் விளங்கும் அரண்மனையில் பிறத்தற்குரிய அர

சன் மைந்தனுகிய அக் குழந்தை இடுகாட்டில் பிறந்தமை குறித்து நெஞ்சங் குமுறி விசயை அழுதனள்.

"வெவ்வா யோரி முழவாக
விளிந்தா ரீமம் விளக்காக
ஒவ்வாச் சுடுகாட் டுயரரங்கின்
நிழல்போல் நுடங்கிப் பேயாட
எவ்வாய் மருங்கும் இருந்திரங்கிக்
கூகை குழறிப் பாராட்ட
இவ்வா ருகிப் பிறப்பதோ
இதுவோ மன்னர்க் கியல்வேந்தே"

(சிந்தாமணி-309)

அக் குழந்தை அரண்மனையில் பிறந்திருந்தால் முழவொலி எங்கும் முழங்கும்; பேரொளிவீசும் விளக்குகள் நகரெங்கும் அமைந்து அழகொடு விளங்கும்; அரங்கங்களில் நடனம் நிகழும்; சான்ருேர்கள் குழந்தையைச் சிந்தையார வாழ்த்துவர். ஆனுல், இடுகாட்டில் நரிகளின் குரலே எங்கும் எழுந்தது. பிணத்தை எரிக்கும் அழலின் ஒளியே அங்கு நிறைந்திருந்தது. பேய்கள் ஆடின; கோட்டான் ஒலியே எங்கும் ஒலித்தது. இவ் விழிந்த இடுகாட்டில் தன் மைந்தன் பிறந்த நிலையைக் குறித்து விசயை ஏங்கி, "கொடிய வாயையுடைய நரியின் குரலே முழவொலியாகவும், இறந்துபட்டவர் உடலை எரிக்கும் நெருப்பொளியே விளக்காகவும், சுடுகாடாகிய அரங்கிலே பேய்கள் நிழல்போல் அசைந்தாடவும், அங்கு எப் பக்கமும் கேட்கும் கோட்டான்கள் ஒலியே பாராட்டுரையாகவும் அமைய இவ்வாறு பிறப்பதுவோ மன்னர் மகனுக்கு இயல்பு?" என்று நெஞ்சழிந்து அலமந்தனள். இப் பாடல் முழுமையும் அவலச் சுவை மல்கி நம் நெஞ்சை உருக்குகிற தன்ருே? இஃது இழிவுபற்றிப் பிறக்கும்

அவலமாம். மேலும், இப் பாடலில் நெட்டோசை நிறைந்து அவல உணர்வை மிகுவிக்கிறது.

கருணாகரத் தொண்டைமான் கலிங்கரைப் பொரு தழித்த பொருகளத்தில் ஓர் அறிவற்ற பேய்க்கு உணவு அளிக்கும்படி மற்றொரு பேய் கூறிற்று.

"பொல்லா வோட்டைக் கலத்துக் கூழ்
புறத்தே யொழுக மறித்துப் பார்த்து
எல்லாங் கவிழ்த்துத் திகைத் திருக்கும்
இழுதைப் பேய்க்கு வாரீரே"

(கலிங்கத்துப்பரணி-572)

ஒரு பேய் உணவு இடப்பட்ட ஒரு கலத்தைக் கையில் தாங்கிக்கொண்டிருந்தது. அஃது ஓட்டையுடைய கலம். ஆகவே, அந்த ஓட்டைவழியாக உணவு ஒழுகிற்று. ஓட்டையினின்று உணவு வெளியே ஒழுகுவதை அப் பேய் தெரிந்துகொள்ளாமல் கலத்தையே 'தலைகீழாகக் கவிழ்த்தது. கலத்திலிருந்து உணவு முழுமையும் கீழே விழுந்துவிட்டது. அதைக் கண்டு அம் மடமைப்பேய் ஒன்றும் புரியாமல் திகைத்து நின்றது. அத்தகைய பேய்க்கு உணவு வார்க்கும்படி வேறொரு பேய் கூறிற்று. இஃது இத்தாழிசையில் அமைந்துள்ள பொருள். இதன்கண் நகைச்சுவை பொருந்தியிருப்பதைக் காண்க. கலத்தினின்று உணவு ஒழுகுவதைக் கண்ட பேய் கலத்தையே தலைகீழாகக் கவிழ்த்துப் பார்த்தது என்பதில் நகைச்சுவை நிறைந்துள்ள தன்றோ? இது பேதைமை அல்லது அறிவின்மைப் பொருள்பற்றிப் பிறக்கும் நகைச்சுவையாகும்.

இங்ஙனம், ஏனைய சுவைகளும் இலக்கியங்களில் விரவி அவற்றிற்குச் சுவையூட்டுகின்றன.

சிறந்த இலக்கியங்களில் பொருளுக்கேற்றவாறு ஓசை நயம் அமைந்திருக்கும். விசயை புலம்பலைப்பற்றிய பாடல் நெட்டோசை நிறைந்து அவல உணர்வைத் தருவதை மேலே கண்டோம்.

கண்ணகியின் மழலைமொழியினைக் கோவலன்,

"அளிய தாமே சிறுபசுங் கிளியே
குழலும் யாழும் அமிழ்துங் குழைத்தநின்
மழலைக் கிளவிக்கு வருந்தின வாகியும்"

(சிலப். மனையறம். 57-59)

என்று பாராட்டினன். இனிமையான குழலிசை, யாழிசை, அமிழ்து ஆகிய இம் மூன்றும் குழைத்ததுபோல் இனிமை வாய்ந்திருந்தது கண்ணகியின் மழலைமொழி. அவ் வினிய மழலைமொழிபோல் தன்னால் பேச இயலவில்லையேயெனக் கண்ணகியின் கிளி வருந்திற்று. இஃது இவ்வடிகளின் பொருளாம். 'குழலும் யாழும் அமிழ்துங் குழைத்த நின், மழலைக் கிளவிக்கு' என்ற இவ் வடிகளில் ழகர ஓசை மல்கி மழலைபோல் இனிமை பயப்பதை ஓர்க.

தன் ஆருயிர்க் கணவனும் கோவலனைப் பாண்டிய மன்னன் கள்வனெனக் குற்றஞ்சாற்றிக் கொலைசெய்த செய்தியைக் கண்ணகி கேட்டுப் பொங்கி எழுந்து,

"மட்டார் குழலார் பிறந்த பதிப்பிறந்தேன்
பட்டாங் கியானுமோர் பத்தினியே யாமாகில்
ஒட்டே னரசோ டொழிப்பேன் மதுரையும்"

(சிலப். வஞ்சின. 35-37)

என்று வீரவுரை பகர்ந்தாள். "கற்புடைப் பெண்டிர் பிறந்த பதியாகிய புகார் நகரில் பிறந்தேன். யான் உண்மையில் பத்தினியாகில் என் கணவனைக் கள்வன்

என்று கொன்ற மன்னனையும் அவன்தன் தலைநகராகிய மதுரையையும் அழிப்பேன்!'' என்று சூளுரைத்தாள். இவ் வடிகளில் வல்லோசை மிக்குக் கண்ணகியின் சீற்றத் திற் கேற்ப நடை அமைந்திருப்பதைக் காண்க. இத்த கைய ஓசையை வல்லிசை வண்ணம் என்று தொல்காப் பியர் குறிப்பர்.

"வல்லிசை வண்ணம் வல்லெழுத்து மிகுமே"

*(தொல்காப்பியம் செய். 208)*

சூர்ப்பனகை இராமனின் அழகிலே மயங்கி அவனை மயக்கப் பேரெழில் வாய்ந்த நங்கையின் உருக்கொண்டு அவனை நோக்கிச் சென்றாள்.

"பஞ்சியொளிர் விஞ்சுகுளிர் பல்லவம் அனுங்க
செஞ்செவிய கஞ்சம்நிகர் சீறடிய ளாகி
அஞ்சொலிள மஞ்ஞையென அன்னமென மின்னும்
வஞ்சியென நஞ்சமென வஞ்சமகள் வந்தாள்"

*(கம்பராமாயணம் சூர்ப். 24)*

என்று கம்பர் அவள் நடந்துசென்ற அழகை விளக்கு கிறார். இவ் வடிகளில் குற்றோசையே நிறைந்து, சூர்ப் பனகை குறுகிய அடிவைத்து நடப்பதுபோன்றே இவ் வடிகளின் நடையும் அமைந்துள்ளது. இன்னும் இப் பாடலின்கண் மெல்லின எழுத்துக்கள் மிகுந்து அவள் தன் இனிய சாயலுக்கும் மெல்லிய நடைக்கும் ஏற்ப இன்னோசை பொருந்தியிருப்பதைக் காண்க. இது மெல் லிசை வண்ணம் அமைந்த பாடல்.

"மெல்லிசை வண்ணம் மெல்லெழுத்து மிகுமே"

*(தொல்காப்பியம் செய். 209)*

என்பது தொல்காப்பியம். இவ்வாறு இலக்கியம் பல வகையிலும் சுவைபெற்று இன்ப ஊற்றாய் அமைகிறது.

இலக்கியங்களின் பெற்றிமையை அறிய இலக்கியத் திறனாய்வு நூல்கள் பல தோன்றவேண்டும். சிறந்த ஆங்கில இலக்கியங்கள் ஒவ்வொன்றிற்கும் பல திறனாய்வு நூல்கள் உள்ளன. தமிழ் இலக்கியங்களைப் பற்றிய திற னாய்வு நூல்கள் மிகக்குறைவு. நம் தமிழ் இலக்கியங்களை ஆராய்தற்குரிய விதிகள் அனைத்தும் தொல்காப்பியத் துள் உள்ளன. இலக்கியப் பொருள் பற்றிய விதிகளை அகத்திணையியல், களவியல், கற்பியல், புறத்திணை இயல் ஆகிய இவ் வியல்கள் விளக்குகின்றன. மெய்ப்பாட் டியலில் இலக்கியச் சுவைபற்றிய விதிகள் அமைந் துள்ளன. அணிகளுக்கெல்லாம் அடிப்படையாக அமைவது உவமையணி. இவ் வணியைப்பற்றிய விதி கள் உவமையியலுள் விளக்கப்படுகின்றன. இலக்கியத் திற்குரிய பல்வகை யாப்பு விதிகளைச் செய்யுளியல் கூறு கிறது. இவ் விதிகளை அடிப்படையாகக்கொண்டு இலக் கியங்களைப் பல கோணங்களிலிருந்து ஆராய்ந்தால் அவ் விலக்கியங்களிலுள்ள பல நுட்பங்கள் புலனாகும்; இலக் கியங்களின் பெருமையையும் நன்கு உணரமுடியும்.

---

# 5

# காரிகையின் காதல் உள்ளம்

காதலொழுக்கத்திற்கு ஊடல் மிக இன்றியமையாத தாகும். ஊடலாவது காதலர் இருவரிடையே நிகழும் சிறு பிணக்கு. அவர்தம் இணக்கச் செறிவினைப் பிணக்கு மிகுவிக்கிறது. ஊடல் நிகழ்ச்சிக்கு அன்பின் முதிர்ச்சியே காரணமாம். காதலர்களிடையே எவ்வளவுக் கெவ்வளவு அன்பு மிகுகிறதோ, அவ்வளவுக் கவ்வளவு அடிக்கடி அவர்தம் ஊடலும் நிகழ்கிறது. காதலன்தன் அன்பு முழுமையும் தனக்கே உரியதாகக் காதலி கருதுகிருள். இங்ஙனமே காதலியின் அன்பு முழுமையும் தனக்குரிய தாகக் காதலன் கருதுகிருன். அவர்களுள் ஒருவர் சிறிது தவறிழைப்பினும் அவர்கள் இடையே ஊடல் நிகழும். தவறு நிகழாதபோதும் அவர்களுள் ஒருவர் சொல்லையும் செயலையும் மற்ருெருவர் பிறழ உணர்ந்து ஊடுதலும் உண்டு. இஃது அவர்தம் அளப்பரிய அன்பின் விளைவு. வெயில் இருந்தாலன்றி நிழலின் பெருமை தெரியாது. இருள் இருந்தாலன்றி ஒளியின் பெருமை விளங்காது.

ஊடல் நிகழ்ந்தாலன்றிக் கூடலின்பம் சிறக்காது. இவ்வுண்மையை உணர்ந்தே திருவள்ளுவர் ஊடலைப் புலவி, புலவி நுணுக்கம், ஊடலுவகை என்ற மூன்று அதிகாரங்களில் சிறப்பித்து விளக்கியுள்ளார்.

தலைவன் பரத்தையின் பொருட்டுத் தலைவியைப் பிரிவது ஊடலுக்கு உற்ற காரணமாக நம் பண்டைப் புலவர்கள் கூறியுள்ளனர். தனக்கே உரிய தலைவனின் அன்பு மற்ருெருத்திபாற் செல்வதைத் தலைவி எங்ஙனம் தாங்க இயலும்? எனவே, தலைவன் தன்பால் வந்துழி அவள் அவனை ஊடுகிருள். ஆனல், இவ் வூடல் அளவு கடந்து நீடித்தலாகாது. நெடுங்காலம் ஊடல் நீடிக்குமானல் அவர்தம் அன்பிற்கு முறிவு ஏற்படக்கூடும். உணவிற்கு அளவோடு உப்பிட்டாலன்றி உணவு சுவைக்காது. உப்பு அளவு மீறுமாயின் உணவின் சுவை கெடுகிறது. அதுபோலக் கூடலின்பத்திற்கு ஊடல் ஓர் அளவுடையதாதல் வேண்டும். ஊடல் அளவிகந்து நீடிப்பின் காதலர் இன்பம் குன்றும்.

"உப்பமைந் தற்ருற் புலவி யதுசிறிது
மிக்கற்ரு னீள விடல்"

என்பது திருக்குறள்.

நீர் உயிர்க்கு இன்றியமையாதது. அது நிழலின்கண் இருப்பின் குளிர்ச்சி மிக்கு, நீர் வேட்கையைத் தணித்து இன்பஞ் செய்கிறது. வெயிலிலுள்ள நீர் இன்பம் பயப்பதில்லை. இங்ஙனமே, கூடலுக்கு இன்றியமையாதது ஊடல். இவ் வூடல் அன்புடையாரிடம் நிகழின் இன்பந் தருகிறது. தான் ஊடுவதைக் காதலர் தாங்க இயலாமையைக் கண்டு காதலி வருந்துவாள்; அவரை விரைவில் கூடவேண்டும் என்ற வேட்கை அவளுக்கு

மிகும். இதனால், ஊடல் அன்புடையாரிடம் இன்பம் பயப்பதாகிறது. அன்பிலாரிடம் ஊடல் நிகழின் ஆற்ரு மைக்கு வருந்துவதும், கூடல் வேட்கையும் அவர்களிடம் ஏற்படுவதில்லை. இதனால், அது துன்பத்தை விளைவிக் கிறது. இவ் வுண்மையை,

"நீரு நிழல தினிதே புலவியும்
வீழுநர் கண்ணே யினிது"

என்ற குறளில் திருவள்ளுவர் நன்கு தெளிவுறுத்து கின்ருர்.

இன்னும், அவர் ஊடலின் நுட்பத்தை மிகச் சுவைபட விளக்கியுள்ளார். தலைமகள் தோழிக்குத் தன் பள்ளி யிடத்து நிகழ்ந்த நிகழ்ச்சி யொன்றைக் கூறுகிருள். பள்ளியின்கண் தலைவனுக்கும் தலைவிக்கும் ஊடல் ஏற் பட்டது. தலைவனுக்கு இயல்பாக அப்போது தும்மல் ஏற்பட்டது. யார் தும்முகிருர்களோ, அவர்களை 'நீடு வாழ்க!' என்று வாழ்த்துவது மரபு. தான் தும்மினுல் தலைவி தன்னை 'நீடு வாழ்க!' என்று வாழ்த்துவாள் என்று எண்ணித் தலைவன் தும்மியதாகத் தலைவி கருது கிருள். இதனைத் தன் தோழியிடம்,

"ஊடி யிருந்தேமாத் தும்மினுர் யாந்தம்மை
நீடுவாழ் கென்பாக் கறிந்து"

என்று கூறுகிருள்.

திருவள்ளுவர் பல குறட்பாக்களில் ஊடல் நுணுக் கத்தை மிக நயம்படப் பாடியுள்ளார். இதனின்றும் காத லர்களின் அன்புப் பெருக்கால் விளைவதே ஊடல் என் பது போதரும்.

இவ் வூடலின் சிறப்பு நோக்கி நம் பண்டைப் புலவர் பெருமக்கள் அதைத் தூய காதலொழுக்கத்திற்குரிய ஐந் திணைகளுள் ஒன்ருகிய மருதத்தின் உரிப்பொருளாகக் கொண்டுள்ளனர். ஊடலும், ஊடல் நிமித்தமும் பற்றிய பாடல்கள் மருதத்திணைக் குரியவையாகும். உள்ளத்து இன்பத்தை ஊற்றுவிக்கும் ஊடல்பற்றிய பாடல்கள் நம் சங்க இலக்கியங்களில் பல உள்ளன. கற்ருேர் ஏத் தும் கலித்தொகையில் மருதக்கலி என்னும் பகுதி ஊடல் சிறப்பையும் நுட்பத்தையும் நனிநயம் பயப்ப இயம்புகின் றது. இப் பகுதியில் முப்பத்தைந்து பாடல்கள் உள்ளன. இவற்றைப் பாடியவர் மருதனிளநாகனுர் என்ற பெரும் புலவராவர். இவர் மருதத்திணைக்குரிய பாடல்களை மிகத் திறம்படப் பாடும் பான்மை யுடையவராகலின் தம் இயற் பெயராகிய இளநாகன் என்பதோடு மருதன் என்ற சிறப்பு அடைமொழி பெற்றனர்போலும்! அவர் பாடிய பாடலொன்றை ஈண்டு ஆராய்வோம்.

தலைவி தன் அருமைக் குழந்தையைச் சேடியோடு கோயிலுக்கு அனுப்புகின்றனள். வழியில் அவள்தன் தலைவனின் பரத்தையர் குழந்தையைத் தடுத்து அன் போடு அவனைத் தம் இல்லத்திற்கு அழைத்துச் சென்று பல அணிகலன்களை அணிகின்றனர். முன்பு தலைவன் தனக்குக் கொடுத்த தொடியினையும் ஒரு பரத்தை குழந் தைக்கு அணிகிருள். பின்பு சேடி குழந்தையைக் கோயி லுக்கு அழைத்துச்சென்று வீட்டிற்குத் திரும்புகிருள். குழந்தையின் வரவை நெடுநேரம் எதிர்பார்த்திருந்த தலைவி தன் குழந்தை பல அணிகலன்களை அணிந்திருப் பதைக் காண்கிருள்; அவன் கையில் தன் காதலனின் தொடி அணியப்பெற்று அழகாக விளங்குவதையும் நோக்குகிருள்; தன் காதலனின் பரத்தையர்தாம் அவற் றைத் தன் அருமந்த குழந்தைக்கு அணிந்திருக்க வேண்

டும் என்பதை உய்த்துணர்கிருள். பரத்தையர் நினைவு அவளுக்குத் தன் காதலன்பால் ஊடலை மிகுவிக்கின்றது. தன் சினத்தினைச் சேடிபால் செலுத்துகிருள்; உள்ளம் அழிகிருள். அவள் சேடியை நோக்கி,

"உறுவளி தூக்கும் உயர்சினை மாவின்
நறுவடி ஆர்இற் றவைபோ லழியக்
கரந்தியா னரக்கவுங் கைநில்லா வீங்கிச்
சுரந்தஎன் மென்முலைப் பால்பழு தாகநீ
நல்வாயிற் போத்தந்த பொழுதினுன் எல்லா
கடவுட் கடிநகர் தோறும் இவனை
வலங்கொளீஇ வாவெனச் சென்ருய் விலங்கினை
ஈர மிலாத இவன்தந்தை பெண்டிருள்
யார்இல் தவிர்ந்தனை கூறு"

என வினவுகிருள்.

"ஏடி, நீ நம் குழந்தையோடு நம் இல்லின் வாயிலி னின்றும் புறப்பட்டபோது, 'தெய்வங்களையுடைய கோவில் கள் தோறும் இவனை வலஞ்செய்வித்து வா!' என்று யான் உனக்குக் கூறினேன். அங்ஙனமே செய்வதாக என்னி டம் கூறிக் குழந்தையை அழைத்துச் சென்ருய். ஆனுல், நான் கூறியபடி நீ செய்யத் தவறினுய். நெடுநேரங் கழித்துக் குழந்தையோடு திரும்பியுள்ளாய். மாமரத்தில் உள்ள நறிய வடுக்கள் காற்றினுல் அசைப்புண்டு அவற் றின் காம்பு முறியும்போது எங்ஙனம் அவற்றினின்றும் பால் பீறிடுமோ அதைப்போல என் மார்பகத்தினின் றும் பால் பீறிட்டது. அதனை யான் மறைத்து என் கையால் அரக்கித் தேய்த்தேன். அங்ஙன்ம் தேய்த்தும் பால் என் கையின் எல்லைக்குள் நில்லாமல் வீணுயிற்று. இவ்வாறு பால், என் குழந்தை உண்ணுமல் பாழாகும்படி இத்துணை நேரம் கழித்து வந்தனையே. இவன்தன்

தந்தையினுடைய பரத்தையர்களுள் யாருடைய இல்லத்திலே இவ்வளவு நேரம் தங்கினாய்? சொல்'' எனக் கேட்கின்றாள்.

அதற்குச் சேடி, ''பச்சைக் குடை நிழலிலே நின் மகன் வீதியிலே சென்றுகொண்டிருந்தான். அவன் பச்சைக் குடையின்கீழ் இருந்த காட்சி பச்சையிலையின் கீழே விளங்கும் தாமரை மலர்போல் இருந்தது. இங்ஙனம் சென்ற நின் மகனைப் பரத்தையராகிய தாய்மார்கள் கண்டார்கள். கண்டதும் தம்மை நினையாதவனும், நன்கு மதிக்கும் மகனல்லாதவனுமாகிய தலைவன் பெற்ற மகனே இக் குழந்தை என்று எண்ணித் தம் இல்லத்தின் வாயிலைக் கடந்து தெருவிலே வந்து இவனைத் தடுத்துத் தம் இல்லத்திற்கு அழைத்துச் சென்றனர். அங்குத் தம் அணிகலன்களில் இவன் வடிவிற்கு ஒத்தவைகளை ஆராய்ந்து கையுறையாக இவனுக்கு அவற்றை அணிந்தார்கள்'' என்று கூறுகிறாள். அதுகேட்ட தலைவி, 'தந்தையுடைய பரத்தையர் கொடுத்தவற்றை வாங்குவானும் இவனொருவன்; இவன் மிகவும் சினத்தற்குரியவன்' என்று தனக்குள் நினைக்கின்றனள்.

''நீருள், அடைமறை ஆயிதழ்ப் போதுபோற் கொண்ட
குடைநிழல் தோன்றுநின் செம்மலைக் காணூஉ
இவன்மன்ற யானேவ உள்ளங்கொண் டுள்ளா
மகனல்லான் பெற்ற மகனென் றகனகர்
வாயில் வரையிறந்து போத்தந்து தாயர்
தெருவில் தவிர்ப்பத் தவிர்ந்தனன் மற்றவர்
தத்தங் கலங்களுட் கையுறை யென்றிவற்
கொத்தவை ஆராய்ந் தணிந்தார் பிறன்பெண்டிர்
ஈத்தவை கொள்வானும் இஃதொத்தன் சீத்தை
செறுதக்கான் மன்ற பெரிது''

பின்பு அவள் தன் குழந்தையை நோக்கி, "உன் விருப்பம்போல ஒழுகும் சிறுவனே, என்னை இகழ்ந்து உனக்கு அணிந்த பரத்தையர் கைமோதிரங்கள் யாவை? யான் காணவேண்டும்" என்கின்றனள். அடுத்து அவன் கைவிரலில் அணிந்துள்ள மோதிரத்தைக் காண் கிருள். "நரும் பூவின் இதழ்போன்ற உன் சிவந்த விரலில் சுருவின் வடிவம் பொறித்த மோதிரத்தை அணிந் தவள் கருத்தை யான் இப்போது உணர்கிறேன். 'இம் மோதிரத்தில் பொறித்துள்ள காமன் கொடியாகிய சுரு வினைப் பரத்தமைக் குணமுடைய இவன் தந்தையாகிய தலைவன் மார்பிலே பொறியாக ஒற்றி யான் அவனை அடிமையாகக்கொண்டு ஆள்வேன்' என்று எனக்கு அறிவித்தற்பொருட்டே அப் பரத்தை இம் மோதிரத்தை இவன் விரலில் அணிந்துள்ளாள்" என்று தலைவி கூறுகிருள்.

"சிறுபட்டி
ஏதிலார் கையெம்மை எள்ளுபு நீதொட்ட
மோதிரம் யாவோயாம் காண்கு
அவற்றுள்,
நருவிதழ் கண்டன்ன செவ்விரற் கேற்பச்
சுருவே றெழுதிய மோதிரந் தொட்டாள்
குறியறிந்தேன் காமன் கொடியெழுதி என்றுஞ்
செறியாப் பரத்தை இவன்றந்தை மார்பிற்
பொறியொற்றிக் கொண்டாள்வல் என்பது தன்னை
அறீஇய செய்த வினை"

மேலும் அவள் தன் புதல்வனை நோக்கி, "நீயும் என்னை இகழும் தன்மையுடையவனோ?" என்கின்றனள். குழந்தையின் முன்கையில் தொடி அணியப்பெற்றிருப் பதைத் தலைவி காண்கிருள். அது பரத்தையால் அணியப்

பெற்றது. தன் தலைவனின் பரத்தமை ஒழுக்கங் கண்டு முன்பே மனம் நொந்திருக்கும் அவள்முன் பரத்தை தந்த கைத்தொடியைக் குழந்தை அணிந்திருப்பது தலைவிக்கு வெந்த புண்ணில் வேலெறிந்தாற்போல் இருக்கின்றது. அவள் அத்தொடியைக் கண்டு இத்துணை வேதனைப்படு வதன் காரணம் அது தன் காதலனால் அப் பரத்தைக்குத் தரப்பெற்றதாகும். அதை அப் பரத்தை அக் குழந்தைக்கு அணிந்தனள். இதனால்தான் தலைவிக்கு அத் தொடியின் காட்சி அத்துணைத் துன்பத்தைத் தருகிறது. அத் தொடியை அவன் கையில் அணிந்த பரத்தை யாரெனத் தலைவி வினவுகிருள். குழந்தை பதில் ஒன்றும் கூற வில்லை. "ஏடா, யாவரினும் தன்னுடைய வனப்பே சிறந்ததெனத் தன்னை மிகுத்துப் புகழும் தன்மையுடை யவள் இத் தொடியைத் தந்தனளோ? 'தொடியை இடுக!' என்று உன்னிடம் சொன்ன பரத்தை யார்தான்?" என மேலும் குழந்தையைக் கேட்கின்றனள்.

"அன்னையோ இஃதொன்று
முந்தைய கண்டும் எழுகல்லா தென்முன்னர்
வெந்தபுண் வேலெறிந் தற்று இஃதொன்று
தந்தை இறைத்தொடி மற்றிவன் தன்கைக்கண்
தந்தாரியார் எல்லாஅ இது ;
இஃதொன்று
என்னொத்துக் காண்க பிறரும் இவற்கென்னும்
தன்னலம் பாடுவி தந்தாளா நின்னை
இதுதொடு கென்றவர் யார்?"

இங்ஙனம் தலைவி கேட்டதும் புதல்வன் அஞ்சு கிருன். அதுகண்டு தலைவி அவனை நோக்கி, "அஞ்சாதே. தொடியை அணிந்துவந்த நீயும் தவறுடையவன் அல் லன்; அதை உன் கையில் அணிந்த மலர்போலும் அழகு

மிக்க மையுண்ட கண்ணையுடைய பரத்தையும் தவறுடையவள் அல்லள்; வேனிற் காலத்துப் புதுப் புனல்போல எல்லார்க்கும் பயன்படும் உன் தந்தையை ஈண்டு நோவார் யாருமிலர். 'என்னினும் மேன்மையுடையவளாய் நின்று என்னை இகழ்ந்து இத் தொடியை இவன் கையில் இட்டவள் யாரோ?' என்று கேட்ட யானே தவறுடையேன்" என்று மிக வருந்திக் கூறுகின்றனள்.

" அஞ்சாதி
நீயும் தவறிலை நின்கை இதுதந்த
பூவெழி லுண்கண் அவளுந் தவறிலள்
வேனிற் புனலன்ன நுந்தையை நோவார்யார்
மேனின்றும் எள்ளி இதுஇவன் கைத்தந்தாள்
தான்யாரோ என்று வினவிய நோய்ப்பாலேன்
யானே தவறுடை யேன் "

தலைவியின் வருத்த உணர்ச்சியை இவ்வடிகள் எத்துணைத் தெளிவாக விளக்குகின்றன காண்மின். தனக்கேயுரிய தலைவனின் அன்பு பரத்தைபாலும் சென்றுவிட்டதே என்ற எண்ணத்தாலன்றோ தலைவிக்கு இத்துணை வருத்தம் ஏற்படுகிறது; தலைவன்பாலும் ஊடுகிருள். புதல்வனைக் கோபிப்பதுபோல இப் பாடலின் பொருள் அமைந்திருப்பினும் உண்மையில் தலைவன்பாலுள்ள தலைவியின் ஊடலை இஃது உணர்த்துவதாகும்.

ஊடலற்ற காதல் உப்பற்ற உணவுபோலச் சுவைக்காது. காதல் மேன்மேலும் சுவைக்கச் சிறு சிறு ஊடல் அடிக்கடி நிகழவேண்டும். எனவே ஊடலைக் காதலுக்குச் சுவையூட்டு அமிழ்தெனலாம். அவ் வூடல் நுட்பத்தை இப் பாடல் சுவைபட விளக்குகின்றது. இதன் வாயிலாக ஒரு காரிகையின் காதலுள்ளத்தின் சீரிய பெற்றிமையை உணரலாகும்.

தலைவனின் பரத்தமை ஊடலுக்கு உற்ற காரண மாகப் பண்டைக் காலத்தே அமைந்திருந்தது. இஃது அக் காலத்தின் பழக்க வழக்கங்களை யொட்டிச் சான்றோ ரால் இலக்கண இலக்கியங்களில் வகுக்கப்பெற்றதாகும். ஆனால், தற்காலத்திற்கு இது பொருந்தாது. உண்மைக் காதலர்கள் வாழ்க்கையில் ஊடலுக்கு எத்துணையோ வாய்ப்புக்கள் உள. அவை இயற்கையாகக் காதலர் வாழ்க்கையில் அமைவனவாகும்.

---

# 6

# அகப்பொருளில் தோழி

காதல் வாழ்க்கையின் சிறப்பையும், நுட்பங்களையும் நம் பழந்தமிழ் நூல்கள் சுவைபட விளக்குகின்றன. அவற்றிற்கெல்லாம் இலக்கணமாக அமைவது தொல்காப்பியமாகும். அந் நூலின் அகத்திணையியல், களவியல், கற்பியல், பொருளியல், மெய்ப்பாட்டியல் ஆகிய பகுதிகள் தலைவன், தலைவி ஆகியோரது காதல் இலக்கணம் கூறுகின்றன. அவ் இலக்கணம் அகப்பொருள் எனப்படும். பிற்காலத்தில் தொல்காப்பியத்தை முதனூலாகக் கொண்டு இறையனரகப்பொருள், நம்பியகப்பொருள் முதலிய வழிநூல்கள் எழுந்தன. அகப்பொருள் இலக்கணத்தில் தலைவன் தலைவியரை அடுத்துச் சிறப்பிடம் பெறுபவள் தோழியே யாவள். அவள் தலைவியினுடைய செவிலித்தாயின் மகளாவள். தலைவிக்கு அவளே உயிர்த் தோழி. அகப்பொருள் களவொழுக்கம், கற்பொழுக்கம் என இரு பகுதி உடையது. இவ் இருவகை காதலொழுக்கமும் தலைமக்களிடை இனிதே நிறைவேறத் தோழி பெரி

தும் துணைபுரிவாள். தலைவி நலங்கருதி அவள் சிந்திப்ப தோடு தலைவியின் சூழ்ச்சிக்கும் துணைபுரிவாள். "சூழ்த லும் உசாத்துணை நிலைமையிற் பொலிமே" என்பது தொல்காப்பியம். சுருங்கக்கூறின், தலைவன் தலைவிய ரிடையே அரும்பும் காதல் மலர்ந்து காய்த்துக் கனிதற்குத் தோழி உறுதுணையாகிருள் எனலாம்.

தலைவனும் தலைவியும் ஊழ்வினைப் பயனுய்த் தற்செய லாக எதிர்ப்பட்டு ஒருவரை யொருவர் காதலிப்பர்; அடுத்த நாளும் தாமே அதே இடத்திற்குச் சென்று சந்திப்பர். அதன்பிறகு தலைவன் தன் தோழன் வாயி லாகத் தலைவி இருக்குமிடம் தெரிந்து அவளை அடை வான். தொடர்ந்து தலைவியைக் காணுதற்குத் தலைவன் விழைவான். ஆனுல், தோழி தலைவியுடனேயே எப்போ தும் இருப்பாள். எனவே, தலைவன் தோழியைக் குறை யிரந்து அவள்வாயிலாகத் தலைவியை நாள்தோறும் அடைவான். தலைவன் தோழியின் துணைகொண்டு தலை வியை அடைவதைப் 'பாங்கியிற் கூட்டம்' என்பர்.

முதல்நாள் தலைவனைச் சேர்ந்து திரும்பும் தலைவி யைத் தோழி கண்டதும் அவளிடம் பல வேறுபாடுகள் இருப்பதைக் காண்பாள். அவளிடம் வேறுபட்ட நறு மணம் வீசும். அவள் தோற்றத்தில் பொலிவு இருக்கும். முன்போல் தன் தோழியரோடு வேண்டியவாறு ஒழுகா மல் தன் பெண்தன்மைக்கேற்ப ஒழுகுவாள். அவள் உண்ணும் அளவு குறைந்துவிடும். பூக் கொய்தல், புனலாடல் போன்ற செயல்களை அவள் தோழியை மறைத்துத் தனித்துச் செய்வாள். முன்பெல்லாம் அவள் எத்திசையிலும் சென்று விளையாடுவாள். ஆனுல், இப் போது ஒரு திசையையே நோக்கிச் செல்வாள்; செவிலி யோடு உறங்குவதுபோன்ற வழக்கமான செயல்களை

மாற்றிக்கொள்வாள். இவ் வேறுபாடுகளால் தலைவிக்குக் களவொழுக்கம் உண்டென்பதைத் தோழி உணர்வாள். இதை 'முன்னுற உணர்தல்' என்பர் தொல்காப்பியர். இவ்வாறு உணர்ந்ததை மேலும் நன்கு தெளிவித்துக் கொள்ளுதற்குத் தோழி தலைவியிடம் பொய்யும் மெய்யும் கூறி ஆராய்வாள். அக்காலத்தில் கன்னியர் பிறை தொழுவது வழக்கம். ஒருத்தி ஒருவனைக் கணவனாகக் கொண்ட பிறகு தன் கணவனையன்றி வேறு தெய்வங்களைத் தொழமாட்டாள். தோழி தலைவியைப் பிறை தொழுதற்கு அழைப்பாள். அவள் தலைவனைக் காதலிப்பதால், பிறை தொழுதற்கு வர மறுப்பாள். இதனின்றும் தலைவியின் காதலொழுக்கம் தோழிக்கு இன்னும் நன்கு விளங்கும். "ஒருவன் என்னிடம் வந்து குறையிரந்தான், நான் மறுத்தேன்!" என்று தோழி பொய்சொல்வாள். அதைக் கேட்டதும் தலைவன் தன்னிடம் குறையிரந்ததைத் தலைவி நினைவுகூர்வாள். அவள் தன் முகக் குறிப்பிலிருந்து தோழி அவள் காதலை உணர்வாள்.

தலைவனைச் சேர்ந்து மீளும் தலைவி ஒருத்தியை அவள்தன் தோழி காண்கிறாள். தலைவி தன் நெற்றியில் முத்துப்போன்ற குறு வியர்வையோடு தனி யழகுடன் விளங்குகிறாள். அவள் தலைவனை யடைந்து மீள்கிறாள் என்ற உண்மையைத் தோழி உணர்கிறாள். ஆனால், அவள் அதை அறியாள்போன்று தலைவியை நோக்கி, "உன் அழகுப் பொலிவையும் நெற்றியில் குறு வியர்வையும் காணும்போது நீ மலையருவியில் நீராடி வருகிறாய் போல் தோன்றுகிறது. உன்னைப் போலக் குறு வியர்வையும் அழகும் பெறலாமெனின் யானும் அம்மலை யருவியில் நீராடுவேன்!" என்று குத்தலாகப் பேசுகிறாள்.

"அறலார் குழலாய் நுதற்குறு
வேர்வும் அழகும் நின்போல்

பெறலாம் எனிற் குடைவேனடி
யேனும் பெருஞ் சுனையே''

என்று தஞ்சைவாணன்கோவை பாடுகிறது. இவ்வாறு தோழி மெய்யும் பொய்யும் கூறித் தலைவியின் காதலொழுக்கத்தை உணர்வதை 'மெய்யினும் பொய்யினும் வழிநிலை பிழையாது பல்வேறு கவர்பொருள் நாட்டத்தானும்' என்று தொல்காப்பியர் குறிப்பிடுகிறார். தோழி தலைவியின் நலத்தில் பெரிதும் நாட்டமுடையவள். எனவே, அவள் தலைவியின் உண்மை உள்ளத்தை உணர இத்துணைச் சூழ்ச்சி செய்கிறாள்.

இனித் தலைவன் தோழிவாயிலாகத் தலைவியைப் பெறுதற்குத் தோழியிடம் வந்து குறையிரப்பான். அவன் தலைவிபால் கொண்ட காதல் என்றும் நிலையானதா என்பதை அறியத் தோழி பல சூழ்ச்சிகளை மேற்கொள்வாள். அவனது பெருமை கூறி, அத்தகையவன் எளியவளாகிய தலைவியைக் காதலிப்பது தகாது என்பாள்.

இவ்வாறே அவள் தலைவனை நோக்கி, "நீ களவொழுக்கத்தை விடுத்து உலகத்தாரைப்போலத் தலைவியைத் திருமணம் செய்துகொள்" என்றும் கூறித் தலைவனை நீங்குமாறு செய்வாள். இதனைத் தொல்காப்பியர் 'உலகு உரைத்து ஒழித்தல்' என்பர். ஆனால், தலைவன் விடாது அடுத்த நாளும் வந்து குறையிரப்பான். தோழியின் நெஞ்சம் சற்று இரங்கும். அவள், "தலைவியைக் கிட்டுவது அருமை" என்பாள்; இன்னும், "நின்னால் காதலிக்கப்பட்டவளுக்கு நீயே சென்று அறிவித்துப் பின்பு என்னிடம் வருக!" என்றும், "தலைவி இளையள், அறியாதவள்" என்றும், "முன்பு நீ அவளை அடைந்தாற்போல் அடைக!" என்றும் கூறித் தலைவனை அகற்ற முயல்வாள். பின்பு தான் தலைவியின் தாய்க்கும், தமையன்மார்க்கும்

அஞ்சுவதாகக் கூறி அவர்கள் வருவர் என்றும், காவலர் வருவரென்றும் தலைவனை அச்சுறுத்துவாள்.

முடிவில் தோழி மனமிரங்கி, "தலைவியை இவ்வாறு எதிர்ப்படுவாயாக!" என்று தலைவனுக்குக் கூறுவாள். இவையெல்லாம் தலைவன் குறையிரந்தபோது அவன் காதலின் தன்மையை ஆய்ந்தறியத் தோழியால் மேற்கொள்ளப்படுவனவாம். இதனைக் 'குறையுற வுணர்தல்' என்று தொல்காப்பியம் கூறும். தலைவன் தோழியைக் குறையிரந்தபோது அவள் தலைவன் தலைவியரின் காதலை உணர்தல் என்பது இதன் பொருள்.

பின்னர், தோழி தலைவியோடு இருக்கும்போது தலைவன், "யானை வந்ததோ? மான் வந்ததோ?" என்று அவற்றைத் தான் துரத்திக்கொண்டு வந்தவன்போலக் கேட்பான். இதன்வாயிலாகவும் தோழிக்குத் தலைவன் தலைவியர் காதலை நன்கு உணர வாய்ப்பு ஏற்படும். இதனை 'இருவரும் உள்வழி அவன் வரவுணர்தல்' என்பர். இங்ஙனம் முன்னுற உணர்தல், குறையுற உணர்தல், இருவரும் உள்வழி அவன் வரவுணர்தல் ஆகிய இவற்றால் தோழி தலைவன் தலைவியரின் உண்மைக் காதலைத் தெளிவுற உணர்ந்து அவர்தம் காதலொழுக்கத்திற்குத் துணைபுரிவதைத் தன் கடமையாகக் கொள்வாள். இதனைப் 'பாங்கிமதி யுடன்பாடு' என்பர் இலக்கண நூலார்.

தோழிவாயிலாகத் தலைவன் தலைவியை அடிக்கடி சந்திப்பான். பகலில் ஒரு குறிப்பிட்ட இடத்திற்குத் தோழி தலைவியை அழைத்துச் செல்வாள். அங்கே தலைவன் வருவான். இருவருங் கூடி இன்புறுவர். இது 'பகற்குறி' எனப்படும். தினைப்புனத்துள் தினைக்கதிர்கள் அறுவடையாகிவிடும். அதன்பிறகு தலைவிக்குத் தினைப்

புனத்தைக் காவல்புரியும் தொழில் இன்மையால் அவள் வீட்டினின்று வெளிச் செல்லமாட்டாள். இதனை ‘இற்செறிப்பு’ என்பர். எனவே, தலைவி தலைவனைச் சந்திக்க இயலாமற் போய்விடும். இரவில் குறிப்பிட்ட இடத்தில் தலைவியை அழைத்துவருமாறு தலைவன் தோழியை வேண்டுவான். இஃது, ‘இரவுக்குறி வேண்டல்’ எனப்படும். முதலில் தோழி மறுப்பாள். பின்பு அவன் வேண்டுகோட் கிசைந்து தலைவியை யாருக்கும் தெரியாதபடி இரவுக்குறி யிடத்துச் சேர்ப்பாள். இவ்வாறு களவொழுக்கம் சிலநாட்கள் நிகழும்.

தலைவன் இரவில் தனித்து வருவதைக் குறித்துத் தலைவியும் தோழியும் கவலையுறுவர்.

தலைவன் வரும் காட்டு வழி எத்துணைக் கொடுமை நிறைந்தது என்பதை நற்றிணைப் பாடலொன்று உணர்த்துகின்றது. “பேய் இயங்கும் நள்ளிரவில் ஊர் முழுதும் உறங்கும்; கேட்போர் அச்சம் கொள்ளும் வண்ணம் இவ்வூரைக் காத்தலையுடைய கானவர்கள் உறங்கார். வன்மையுடைய ஆண்யானையோடு போர்செய்த வாள்போலும் வரிகளையுடைய புலி மலையடியினின்று முழங்கும். இப்பொழுது நம் மெல்லிய தோல் மெலிவுற்று நாம் வருந்தினும் அவர் இங்கு வராமல் இருத்தலே மிக நல்லதாகும்” என்று தோழி இரவில் காட்டு வழியில் தலைவன் வருங்கால் ஏற்படக்கூடிய ஏதம் அஞ்சிக் கூறுகின்ருள். தன் ஆருயிர்த் தலைவிக்காகத் தோழி எத்துணை யளவு தலைவனது நலத்தின்கண் நாட்டமுடையவள் என்பது இதனின்றும் தெளிவாகிறது.

நாளடைவில் தலைவன் தலைவியரது களவொழுக்கம் ஊராருக்குத் தெரிந்துவிடும். ஊரெங்கும் அலர் எழும்.

தலைவியின் பெற்றோர்கள் அதை அறிந்து தலைவிக்குக் காவலைக் கடுமையாக இடுவர். இதனால் தலைவி, தலைவனைக் காண இயலாமல் போய்விடும். மேலும் அயலார் தலைவியின் பெற்றோர்களை அணுகித் தலைவியை மணம் பேசுவர். இவற்றையெல்லாம் அறிந்த தோழி தலைவனைக் கண்டு, அவன் இரவில் தனித்து வருவதால் தலைவிக்கு ஏற்படும் கலக்கத்தையும், தலைவிக்கு இடப்பட்டிருக்கும் காவலின் கடுமையையும், அயலார் வந்து அவளை மணம் பேசுவதையும் அவனுக்கு உணர்த்தி விரைவில் தலைவியை மணந்துகொள்ளுமாறு அவனை வேண்டுவாள். தலைவன் அதற்கு இசைந்து திருமணத்திற்காகப் பொருளீட்டத் தலைவியைப் பிரிந்து செல்வான். அக் காலத்தில் ஒருவன் தானே முயன்று ஈட்டிய பொருளைக்கொண்டே திருமணம் செய்துகொள்வான் என்பது இதனின்றும் தெரிகிறது. இதனை, 'வரைவிடை வைத்துப் பொருள் வயிற் பிரிவு' என்பர்.

தலைவன் தலைவியைத் திருமணம் செய்துகொள்வதாக அவள்தன் பெற்றோருக்குத் தெரிவிப்பான். அவர்கள் மறுத்தால் தோழி செவிலிக்கு அறத்தொடு நிற்பாள். அறத்தொடு நிற்றலாவது, தலைவன் தலைவியர் களவொழுக்கத்தைத் தெரிவித்தல் என்பதாகும். பின்பு செவிலி நற்றாய்க்கும், நற்றாய் தந்தைக்கும் அறத்தொடு நிற்பார்கள். பெற்றோர் தலைவியின் களவொழுக்கத்தை உணர்ந்த பின்பும் அவளைத் தலைவனுக்குத் திருமணம் செய்துகொடுக்க மறுப்பார்களாயின், தலைவன் தலைவியை யாரும் அறியாமல் தன்னூருக்குக் கொண்டுசெல்வான். இஃது 'உடன்போக்கு' எனப்படும். உடன்போக்குக்கு உறுதுணையாய் இருப்பவளும் தோழியே. தலைவன் தலைவியரின் உண்மைக் காதலின் தன்மையைத் தோழியே அறிவாள். அவர்கள் திருமணம் நிறைவேறாமற்போனால்,

இருவரும் உயிர்வாழ மாட்டார்கள் என்பது அவளுக்கு நன்கு தெரியும். இந் நிலையில் அவர்கள் திருமணம் மறுக்கப்பட்டபோது தோழியே, தலைவியை உடன் கொண்டு செல்லுமாறு தலைவனைத் தூண்டுவாள் ; தலைவியையும் அதற்கு உடன்படுமாறு செய்வாள்.

இங்ஙனம் தலைவியை உடன்கொண்டு சென்ற தலைவன் தன்னூரில் அவளைத் திருமணம் செய்துகொள்வான். தலைவியின் பெற்றோர்கள் திருமணத்திற்கு இசைவார்களாயின் தலைவியின் ஊரிலேயே திருமணம் நடைபெறும். இதுவரை கூறியவாற்றால் களவொழுக்கத்தில் தோழி யாற்றும் கடமைகளை ஒருவாறு உணரலாம்.

இனித் தலைவியின் கற்பொழுக்கத்திலும் தோழி தலைவிக்கு உறுதுணையாய் இருந்து உதவுவாள். தலைவன் தலைவியைப் பிரிந்து பரத்தையிடம் செல்வதுண்டு. இது 'பரத்தையிற் பிரிவு' எனப்படும். அதைக் குறித்துத் தலைவி கண்ணீர் உகுத்துப் பெரிதும் கலங்குவாள். அப்போது தோழி அவளுக்குத் தக்க அறிவுரை கூறி ஆற்றுவிப்பாள்.

"இதுமற் றெவனோ தோழி துனியிடை
யின்னர் என்னும் இன்னாக் கிளவி
... ... ... ... ... ... ... ...
திருமனைப் பலகடம் பூண்ட
பெருமுது பெண்டிரேம் ஆகிய நமக்கே"

இக் குறுந்தொகை அடிகள் பரத்தையிற் பிரிந்த தலைவனைக் குறித்து வருந்தும் தலைவிக்குத் தோழி அறிவுறுத்துவதைக் குறிக்கின்றன. 'மனைவாழ்வுக்குரிய பல கடப்பாடுகளை மேற்கொண்ட பெரிய முதிய பெண்டி

ராகிய நாம் தலைவனைக் குறைகூறுவதால் பயன் யாது ?' என்ற கருத்து இவ்வடிகளில் அமைந்துள்ளதாகும். அஃதாவது, தலைவனைக் குறைகூறுமல் தன் கடமைகளைத் தலைவி செய்யவேண்டும் என்று தோழி அறிவுறுத்துகின்ருள்.

தலைவனின் பரத்தையிற் பிரிவு காரணமாகத் தலைவி மிக்க ஊடல் கொண்டிருப்பாள். அப்போதும் தோழி தலைவியின் ஊடல் மிகுதியும் நீடிக்காதபடி தணிவிப்பாள்.

கற்பொழுக்கத்தில் தலைவன் கல்வியின்பொருட்டும் பகைமேற் செல்வதன்பொருட்டும் பகைவர்பால் செல்லுதற்குரிய தூதின்பொருட்டும் பொருளின்பொருட்டும் தலைவியைப் பிரிவதுண்டு. அங்ஙனம் பிரியுங்கால், "கார் காலம் வருவதற்குள் வந்துவிடுவேன் ; கலங்காதே!" என்று தலைவிக்கு ஆறுதல் கூறிப் பிரிந்து செல்வான். கார்காலம் வந்துவிடும் ; ஆனல், தலைவன் வரமாட்டான். அப்போது தோழி தலைவியை ஆற்றுவிப்பதைத் தன் கடமையாகக் கொள்வாள்.

" வீங்கிழை நெகிழ விம்மி யீங்கே
எறிகண் பேதுறல் ஆங்கோ டிட்டுச்
சுவர்வாய் பற்றுநின் படர்கேன் நீங்க
வருவேம் என்ற பருவம் உதுக்காண்......
தனியோர் இரங்கும் பனிகூர் மாலைப்
பல்லான் கோவலர் கண்ணிச்
சொல்லுப அன்ன முல்லைமென் முகையே "

இக் குறுந்தொகைப் பாடலிலிருந்து கார்ப் பருவம் வந்துவிட்டதைக் கண்டு வருந்திய தலைவியைத் தோழி ஆற்றுகின்ற தன்மையை அறியலாம். "உன் அணி கலன்கள் நெகிழும்படி விம்மி அழுது கண்ணீரைப்

பெருக்கவேண்டாம். தலைவர் வரும் நாளைச் சுவரில் கோடிட்டுக் கணக்குப் பார்த்து நீ பெரிதும் துன்புறு கிருய். அத் துன்பம் அறவே நீங்க "மீண்டு வருவேன்" என்று தலைவர் கூறிய பருவம் இதோ வந்துவிட்டது பார். அப் பருவம் வந்துவிட்டது என்பதைத் தலைவரைப் பிரிந்திருக்கும் தலைவியர் வருந்துதற்குக் காரணமாகிய குளிர்ச்சிமிக்க மாலைக்காலத்தில் இடையர்கள் தொடுத் துக்கொண்டு வரும் முல்லைமாலையே குறிப்பதாகும். எனவே, தலைவர் விரைவில் வருவார் என்று தோழி தலைவியை ஆற்றுவிக்கின்ருள். முல்லை கார்காலத்தில் மலருமாகையால் அக் காலத்தைக் குறிக்க இடையர் முல்லைமாலை தொடுத்துவந்தனர் என்ருள்.

இவ்வாறு தோழி தலைவியின் காதல் வாழ்க்கைக்குத் தொடக்கத்திலிருந்தே உற்றுழி உதவி, அன்புணர்ச்சி யோடு தன் கடமைகளைச் செம்மையாக ஆற்றி, அவள் தன் வாழ்வில் இன்பமும் வளனும் பெருகுமாறு செய்வாள்.

---

# 7

# முல்லைப் பாட்டு

பண்டைத் தமிழ்ச் சான்றோர்கள் வாழ்க்கையை நுண்ணிதின் ஆராய்ந்து அதனை இரு பெரும் பிரிவு களாகப் பிரித்தனர். அவை அகம், புறம் என்பனவாம். அகமாவது, அன்பு அல்லது காதல் வாழ்க்கையைப் பற்றியது. புறமாவது, மக்கள்தம் பல வினைகளுக்குரிய முயற்சி வேறுபாடுகளையும் பிறவற்றையும் பற்றியதாம். குடும்ப வாழ்க்கையை அகம் என்றும், குடும்பத்திற்குப் புற மாக அடங்கிய வாழ்க்கையைப் புறம் என்றும் கூறலாம்.

அகம் சிறப்பாக ஐந்து வகையான ஒழுக்கங்கள் அடங்கியது. அவற்றைக் குறிஞ்சி, பாலை, முல்லை, நெய் தல், மருதம் என்பர். குறிஞ்சியாவது, தலைவன் தலைவி யைத் தற்செயலாய் எதிர்ப்பட்டுக் களவின்கண் கூடுதல். பாலையாவது, தலைவன் தலைவியைப் பிரிதல். தலைவன் பிரிவைத் தலைவி ஆற்றியிருப்பது முல்லை. அவன் பிரிவை ஆற்ற இயலாது தலைவி இரங்குதல் நெய்தலாம். தலைவி தலைவன்பால் கொள்ளும் ஊடல்பற்றியது மருதம்.

இவை அகப்பொருளுக்குரிய சிறப்பான ஒழுக்கங்கள். இவ் வொழுக்கங்களை உரிப்பொருள் என்று இலக்கண நூல்கள் கூறும். இவை அன்பின் ஐந்திணை எனப்படும். அவ் வைந்தோடு கைக்கிளை, பெருந்திணை என்ற இரண் டையும் சேர்த்து எழுதிணையாகக் கூறுவர். கைக்கிளை யாவது, தலைவன் தலைவி ஆகிய இருவருள் ஒருவரே காதலுடையவராதல். இதனை 'ஒருதலைக் காமம்' என்பர். பெருந்திணையாவது, மேற்குறித்த ஐந்திணைக்கும் பொருந் தாத காதலொழுக்கமாகும். இதைப் 'பொருந்தாக் காமம்' என்பர். இங்ஙனமே புறத்திற்கும் எழுதிணை உண்டு. அவை வெட்சி, வஞ்சி, உழிஞை, தும்பை, வாகை, காஞ்சி, பாடாண் என்பன. பகைவர்தம் ஆநிரையைக் கவர்தல் வெட்சியாகும். பகைவர் நாட்டை எதிர்த்துப் பொருவது வஞ்சி. பகைவர் மதிலை அழித்தல் உழிஞை யாகும். இரு பெரு வேந்தரும் பொருவது தும்பையாம். வெற்றியைக் குறிப்பது வாகை. காஞ்சி நிலையாமையைக் குறிப்பதாகும். ஒருவனை ஒருவன் சிறப்பித்துக் கூறுவது பாடாண் ஆகும். இவ் வெழுவகைப் புறத்திணைகளையும் அகத்திணை ஏழோடும் தொல்காப்பியர் பொருத்திக் கூறு வர். குறிஞ்சித் திணையின் புறம் வெட்சி என்றும், முல் லைத் திணையின் புறம் வஞ்சி என்றும், மருதத் திணையின் புறம் உழிஞை என்றும், நெய்தல் திணையின் புறம் தும்பை என்றும், பாலைத் திணையின் புறம் காஞ்சி என் றும், கைக்கிளையின் புறம் பாடாண் என்றும் அவர் கூறி யுள்ளார்.

இவ்வாறு அகம், புறம் எனப் பகுத்து மக்கள்தம் வாழ்க்கைக்கு இலக்கணம் கண்டனர் நம் பழம் புலவர்கள். உலகிற் சிறந்த மொழிகளில் எழுத்திற்கு இலக்கணம் உண்டு; சொல்லிற்கு இலக்கணம் உண்டு; ஆனல், வாழ்க்கைக்கு இலக்கணம் நம் அமிழ்தினும் இனிய தமிழ்

மொழியன்றி வேறெந்த மொழியிலும் இல்லை. நம் பண்டைப் புலவர்கள் செய்யுள் வழக்கு, உலக வழக்கு ஆகிய இரண்டையும் கூர்ந்து ஆராய்ந்து, அவ்விரண்டையும் இயைத்து வாழ்க்கைக்கு இலக்கணம் வகுத்தனர். இது 'பொருள் இலக்கணம்' எனப்படும். புலவர்கள் இருவழக்கினையும் இயைத்து வகுத்த நெறியினைப் 'புலநெறி வழக்கம்' என்பர்.

> "நாடக வழக்கினும் உலகியில் வழக்கினும்
> பாடல் சான்ற புலநெறி வழக்கம்..."

என்பது தொல்காப்பியம்.

சங்க இலக்கியங்களில் ஒன்று 'பத்துப்பாட்டு'. அந்நூலின்கண் பத்துப்பாடல்கள் அடங்கியுள்ளமையால் அதற்கு அப்பெயர் வழங்கலாயிற்று. அப் பத்துப் பாடல்களுள் ஒன்று முல்லைப் பாட்டு. இது தலைவனைப் பிரிந்த தலைவி, தலைவன் வருமளவும் பிரிவுத் துன்பத்தை ஆற்றியிருப்பதாகிய முல்லை ஒழுக்கத்தை விரித்துப் பாடுகிறது. இம் முல்லை ஒழுக்கத்திற்குரிய பெரும்பொழுது கார்காலம்; சிறுபொழுது மாலை. இவ் வொழுக்கத்திற்குரிய நிலம் காடும் காடுசார்ந்த இடமுமாகும். இம் முல்லைப் பாட்டைப் பாடிய புலவர் நப்பூதனார் என்பவராவர்.

தலைவன் பகையரசனை எதிர்த்துப் படையெடுத்துச் சென்றனன். அவன் சென்றபோது, கார்காலம் தொடங்குமுன் தான் வந்துவிடுவதாகத் தலைவிக்குக் கூறி அவளைப் பிரிந்தனன். கார்காலம் தொடங்கிற்று. முதல் மழை பொழிந்தது. ஒருகால் திருமால் மாவலி மன்னனிடம் மூவடி மண்வேண்டிச் சென்றபோது, அம் மன்னன் அம் மூவடி நிலத்தைத் தருதற்கு அறிகுறியாகத் திருமால் கையில் நீர் வார்த்தான். அப்போது

திருமால் அந்நீர் ஒழுகும் கையுடன் ஓங்கி வளர்ந்து இவ் இருநிலத்தை ஈரடியால் வளைத்தனன். அத் திருமால் போல மேகம் கடலில் நீரைப் பருகி வலமாக மேலெழுந்து, மலைமுகடுகளில் தங்கி உலகை வளைத்துப் பெரும் பெயல் பொழிந்தது.

"நனந்தலை யுலகம் வளைஇ நேமியொடு
வலம்புரி பொறித்த மாதாங்கு தடக்கை
நீர்செல நிமிர்ந்த மாஅல் போலப்
பாடிமிழ் பனிக்கடல் பருகி வலனேர்பு
கோடுகொண் டெழுந்த கொடுஞ்செல எழிலி
பெரும்பெயல் பொழிந்த......"

என்று நனிநயம் பொருந்த நப்பூதனார் பாடுகிறார். இங்ஙனம் முதல் மழை பொழிந்த நாளன்று மாலைக்காலம் நெருங்கிற்று. அம் மாலைக்காலம் பிரிந்தார்க்குப் பெருந் துன்பம் தரும் நேரமாகும். ஆனால், பிரிந்து சென்ற தலைவன் இன்னும் வரவில்லை. எனவே, தலைவிக்கு வருத்தம் மிகுந்தது. முல்லைநிலக் காட்டில் மிக அழகியதாக அமைக்கப்பட்ட எழுநிலை மாடத்தில் அவள் தன் தலைவனை எதிர்பார்த்தவண்ணம் இருந்தனள். அவள் வருத்தத்தை வயது முதிர்ந்த பெண்கள் உணர்ந்தனர். அவளை எப்படியும் ஆற்றுவிக்க அவர்கள் கருதினர். எனவே, அவர்கள் ஊர்ப்பக்கத்தே யுள்ள மாயோன் கோயிலிற்குப் போய் நெல்லும், மணமிக்க முல்லை மலரும் தூவி, வணங்கி நற்சொற் கேட்க நின்றனர். அக் கோயிலுக் கருகே ஒரு மாட்டுக் கொட்டில் இருந்தது. புல் மேயப் போன தம் தாய்மார்கள் இன்னும் வராமையால் அக் கொட்டிலில் இருந்த கன்றுகள் பெரிதும் வருந்தின. அங்கு ஓர் இடைப்பெண் இருந்தனள். அவள் குளிர் மிகுதியால் தன் தோளின்மீது தன் கையைக் கட்டிய வண்ணம் நின்றுகொண்டிருந்தாள். அவள் வருத்த

மிகுந்த கன்றுகளை நோக்கி, “நீங்கள் வருந்தாதீர்கள்; உங்கள் தாய்மார் கோவலரால் பின்னின்று ஓட்டப்பெற்று இப்பொழுது வந்துவிடுவர்” என்று கூறினள். இச் சொற்கள் மாயோன் கோயிலில் நற்சொல் கேட்டு நின்ற பெருமுதுபெண்டிர் செவிகளில் விழுந்தன. அப் பெண்டிர் இச் சொற்களை நற்சொல்லாகக்கொண்டு தலைவியிடம் வந்து அதைத் தலைவன் வருதற்குரிய நன்னிமித்த மொழியாக உரைத்தனர். மேலும் அவர்கள், “நின் காதலன் போர்மேற் புறப்பட்டபோது அவன் படைத்தலைவன் நற்சொல் கேட்போரிடம் கேட்டு வந்த நன்னிமித்த சொற்களும் நன்றாயிருந்தன. ஆகலின், நின் தலைவன் பகைவர் இடத்தைத் திறைப்பொருளாகக் கவர்ந்து போர் வினையை இனிது முடித்து விரைவில் வருவது திண்ணம். மாயோய்! நின் துன்பம் ஒழிக!” எனத் தலைவிக்கு ஆறுதல் கூறினர். தலைவியின் துன்பம் சிறிதும் தணியவில்லை. அதைக் கண்டு முதுபெண்டிர் மேலும் மேலும் அவளுக்கு ஆறுதல்மொழி புகன்றனர். ஆனால், தலைவி ஆற்றாளாயினள். அவள்தன் குவளைமலர் போன்ற கண்களில் நீர் பெருகி முத்து முத்தாய்த் துளிர்த்தது.

படையெடுத்துச் சென்ற வேந்தனாகிய தலைவன் பகை நிலத்திற்கு அரணாய் அமைந்து அகன்ற முல்லைக்காட்டில் தங்கினன். அது காட்டாறு சூழ்ந்த முல்லைக் காடு. அக் காட்டில் நிறைந்திருந்த பிடவஞ் செடிகளையும், பசிய தூறுகளையும், அங்கிருந்த வேடரின் சிறு வாயில்களையுடைய காவற்கோட்டைகளையும் அழித்துப் பெரியதொரு பாசறையைச் சமைத்தனன். அப் பாசறையைச் சுற்றி முள்ளால் மதிலும் அமைக்கப்பட்டது.

“படுநீர்ப் புணரியிற் பரந்த பாடி”

என அப் பாசறையின் பெருமையை ஆசிரியர் பாடுகிறார்.

'ஒலிக்கின்ற நீரை யுடைய கடல்போல் பரந்துபட்ட பாசறை' என்பது இவ் வடியின் பொருளாம்.

அப் பாசறைக்குள் பல தெருக்கள் இருந்தன. அத் தெருக்களில் வீரர்கள் தங்குதற்குப் பல அறைகள் ஒழுங் காக வகுக்கப்பட்டிருந்தன. அவ் வறைகளின் கூரைகள் தழைகளால் வேயப்பட்டிருந்தன. அங்குத் தெருக்களின் நாற்சந்தி கூடும் முற்றத்தில் மத யானை ஒன்று காவலாக நிறுத்தப்பட்டிருந்தது. பாசறைக்குள் புகுவோர் இம் முற்றத்தின்கண் வந்தே பாசறையிலுள்ள தெருக்களுக் குப் போகவேண்டும். எனவே, அங்கு யானை காவலாக நிறுத்தப்பட்டது. அவ் யானைக்கு உணவாகக் கரும்பும், கதிரும், அதிமதுரத் தழையும் இடப்பட்டிருந்தன. ஆனால், யானை அவற்றை உண்ணவில்லை. அவற்றைத் தன் துதிக்கையில் எடுத்துத் தன் நெற்றியைத் துடைத் துக்கொண்டது. பின்பு தன் துதிக்கையைத் தன் கொம் பிலே தொங்கவிட்டவண்ணம் நின்றது. அதைப் பாகர் கண்டனர். அவர்கள் உடனே அதை அணுகிப் பரிக் கோலினால் அதைக் குத்தி, யானையைப் பழக்கும் வட சொற்களைப் பலகால் கூறி அதட்டி அதற்குக் கவளம் ஊட்டினர்.

அப் பாசறையில் ஒரு வில்லரண் அமைக்கப்பட்டிருந் தது. வன்மையான விற்களில் தூணிகள் தொங்கவிடப் பட்டிருந்தன. அக் காட்சி, ஒரு துறவி தனது முக்கோலை நாட்டி அதன்கண் காவியுடையைத் தொங்கவிட்டு வைத் தாற்போல இருந்தது.

"கல்தோய்த்து உடுத்த படிவப் பார்ப்பான்
முக்கோல் அசைநிலை கடுப்ப நற்போர்
ஓடா வல்வில் தூணி நாற்றி"

என்று அக் காட்சியை நப்பூதனார் சித்திரித்துள்ளார்.

அவ் விற்களெல்லாம் நிலத்தில் ஊன்றப்பெற்றுக் கயிற்ருல் வளைத்துக் கட்டப்பட்டிருந்தன. அவ்விடத்தில் குந்தக் கோல்கள் நட்டு அவற்றின்மீது படல்களை வரிசையாகப் பிணைத்திருந்தனர். இவ்வாறு அமைக்கப்பட்ட வில்லரணே பல்வேறு படைகளுக்குக் காவலிடமாக இருந்தது.

அப் படைகளுக்கு நடுவே அரசனுக்கென எல்லோரும் உடன்பட்டு ஓர் உள்வீடு அமைத்திருந்தனர். அது நீண்ட குத்துக்கோல்களோடு பலநிறம் வாய்ந்த மதிட்டிரையை வளைத்து இயற்றப்பட்டிருந்தது.

அப் பாசறையில் இளம் பாவையர் பலர் இருந்தனர். அவர்கள் தம் முன்கைகளில் வளையல்கள் அணிந்திருந்தனர். அவர்தம் முதுகின்மீது கூந்தல்கள் அழகாக அசைந்தன. அவர்கள் வாளினைத் தம் கச்சிலே (இரவிக்கை) சேரக் கட்டியிருந்தனர். அவ் வாளின் பிடி திண்ணியதாக இருந்தது. அதன் ஒளியால் இரவும் பகலாயிற்று. அப் பாசறையில் விளக்குகள் எரிந்து கொண்டிருந்தன. அவ் விளக்குகள் அவியுந்தோறும் அம் மங்கையர் திரிக் குழாயினுல் திரியைக் கொளுத்தி அவற்றை எரியச்செய்தனர்.

நள்ளிரவில் அப் பாசறையின்கண் எங்கும் அமைதி நிலவியது. அங்குள்ள குதிரை, யானை முதலியன அப்போது உறங்குதலின் அவற்றின் கழுத்தில் கட்டியிருந்த மணியோசையும் அடங்கிற்று. அந் நேரத்தில் மெய்க்காப்பாளர்கள் காவலாகச் சுற்றித் திரிந்தனர். அவர்கள் தலைப்பாகை அணிந்து சட்டை தரித்திருந்தனர். அவர்கள் உயர்ந்த நல்லொழுக்க முடையவர்கள்; தம் மன்னனுக்கு உண்மையாக உழைக்குந் தன்மையர். அந் நள்

ளிரவில் உறக்க மயக்கத்தால் அவர்கள் அசைந்து திரிந்தனர். அவர்கள் அங்ஙனம் அசைந்து சென்ற தன்மையானது, மல்லிகைக்கொடி படர்ந்த சிறுதூறுகள் அசையும் காற்றினுல் அசைந்தாற்போல இருந்தது என்பர் நப்பூதனுர்.

> " அதிரல் பூத்த ஆடுகொடிப் படாஅர்
> சிதர்வரல் அசைவளிக்கு அசைவந் தாங்குத்
> துகில்முடித்துப் போர்த்த தூங்க லோங்குநடைப்
> பெருமூ தாளர் ஏமஞ் சூழ......"

என்று அவர் பாடுகிருர்.

கார்காலத்து முதல் பெயல் பொழிந்த அந் நாளின் நள்ளிரவில் பொழுதினை இத்துணை என்று அளவிட்டு அறியும் மக்கள் அரசனை அணுகி அவனைத் தொழுது வாழ்த்தி அந் நள்ளிரவுப் பொழுதை அறிவித்தனர். அரசன் பள்ளியறைக்குச் சென்ருன். அப் பள்ளியறை *யவனரால் புலிச்சங்கிலி விட்டு மிக அழகாக வகுக்கப் பட்டிருந்தது. அவ் யவனர் குதிரையை அடிக்கும் சவுக்கால் சூழப்பட்ட உடையை அணிந்திருந்தனர்; அச் சவுக்கு மறையும்படி அவ்வுடை மடங்கிப் பெருகும் வண்ணம் அதைச் செறிவுற உடுத்திருந்தனர். மேலும், அவர்கள் சட்டை யணிந்து, காண்பார் அச்சங்கொள்ளும் தோற்றமுடையவராய் இருந்தனர். அவர்கள் வலிமிக்க உடலையும் அஞ்சாமையையும் உடையவராய் விளங்கினர். இத்தகைய யவனரால் அமைக்கப்பட்ட பள்ளியறை புறவறை, உள்ளறை என இரண்டாகப் பகுக்கப்பட்டிருந்தது. திண்ணிய கயிற்றுல் கட்டப்பட்ட திரை இங்ஙனம் அவ் வறையை இரண்டாகப் பகுத்து நின்றது. அங்கு

---

* யவனர் - கிரேக்கர், சோனகர்.

அழகிய மணிவிளக்கு ஒளிவீசி விளங்கியது. அப் புற வறையின் கண்ணே சட்டை யணிந்த ஊமை †மிலேச்சர்கள் காவலிருந்தனர். அவ் ஊமை மிலேச்சர்களை,

"உடம்பின் உரைக்கும் உரையா நாவிற்
படம்புகு மிலேச்சர்"

எனச் சுவைபொருந்த ஆசிரியர் குறிப்பிடுகிறார். 'உடம்பால் குறிகாட்டித் தெரிவித்தலன்றி நாவால் உரைக்க மாட்டாத சட்டையிட்ட மிலேச்சர்கள்' என்பது இவ் வடியின் பொருளாம்.

உள்ளறையில் படுக்கையின்கண் அரசன் அமர்ந்திருந்தனன். அவனுக்கு உறக்கம் வரவில்லை. அவன் உறக்கங் கொள்ளாமை ஏன்? கார்காலம் தொடங்கிவிட்டமையால் தன் கருத்துக்கினிய கட்டழகியை நினைந்து கவன்றனனா? இல்லை, இல்லை. தன் கடமையை மறவா மாபெரும் வேந்தன் அவன். தான் மேற்கொண்ட கடமை நிறைவேறுமுன் தன் காதலிபால் கருத்திழக்கும் மனமெலிவு அவனிடம் இல்லை. தன் போர்த்தொழில் இன்னும் இனிது முடியாமையால் அதை வெற்றியுடன் முடிக்கவேண்டும் என்ற விருப்பத்தால் அவன் உறக்கம் கொள்ளவில்லை. அதுவரை நிகழ்ந்த போரிலே, அவன் படை பட்ட துன்பங்களை நினைந்து பெரிதும் இரங்கினான். பகைவர்தம் வேல் பாய்ந்தமையால் புண்மிக்குத் தம் பிடிகளையும் மறந்த ஆண் யானைகளை உள்ளினன்; பகைவர் யானைகளின் கைகளைப் பாம்பு பதைப்பதுபோலப் பதைக்கும்படி வெட்டி வீழ்த்தித் தம் செஞ்சோற்றுக் கடன் கழித்து இறந்த தன் வீரர்களை நினைந்தனன்; பகைவர் அம்புகள் தம்மீது அழுந்தினமையால் செவி

† மிலேச்சர் - சரவாசிகள் என்பர் நச்சினார்க்கினியர். ஆரியர் என்பர் மறைமலையடிகளார்.

யைச் சாய்த்துக்கொண்டு புல் உண்ணுமல் வருந்தும் குதிரைகளை எண்ணினன். இவற்றையெல்லாம் நினைந்து ஒரு கையைப் படுக்கையின்மீது வைத்தும், மற்ருெரு கையால் முடியைத் தாங்கியும் நெடுநேரம் சிந்தித்து இரங்கிஞன். இவ்வாறு அவனுக்கு அவ் விரவு முழுதும் கழிந்தது. மறுநாள் அவன் தன் பகைவரை எண்ணி வீறுகொண்டெழுந்தான். வாளைப் பிடித்த தன் வலிய கையிஞல் பகைவரை வெட்டி வீழ்த்திப் பெரு வெற்றி கொண்டான்; வெற்றி முரசு முழங்கிய தன் பாசறையில் அன்றிரவு அவன் இனிய துயில்கொண்டான். மறுநாள் தன் மனைவியைக் காணப்போகும் மகிழ்ச்சியே அவனை அன்றிரவு இன்துயிலில் ஆழ்த்தியது.

பாசறையில் இங்ஙனம் இன்துயில் கொள்ளும் தன் அருமைத் தலைவனைத் தன் பக்கலில் காணுது தலைவி வருந்தினள். அவனையே நினைந்து நினைந்து நெஞ்சமுருகினள். பெருமுதுபெண்டிர் நற்சொற் கேட்டுவந்து அவளை ஆற்றுவித்தும் அவள் ஆறுதல் பெறவில்லை. அவள் வருந்தியவண்ணம் இருந்தாள். பிறகு அவளுக்கே தான் ஆற்ருமல் வருந்துவது தவறு என்று தோன்றிற்று. தன் தலைவன் தன்னை ஆற்றியிருக்கும்படி அறிவுறுத்தியிருக்கத் தான் ஆற்ருமல் வருந்துவது தகாது என்று நீடு நினைந்து தன்னைத் தேற்றிக்கொண்டு தன் மெலிவால் கழன்று விழும் வளையல்களைக் கழலாமல் செறித்தனள். தன் ஆற்ருமை உணர்வும் தான் ஆற்றி இருக்கவேண்டும் என்ற உணர்வும், அவள் உள்ளத்தில் ஒன்றுசேர்ந்து அவள் அறிவை மயக்கின. அவ் வறிவு மயக்கத்தால் பெருமூச்செறிந்தனள்; அம்பு தைத்த மயில் போல நடுங்கினள். அந் நடுக்கத்தால் செறித்த அணிகலன்கள் சிறிது கழன்றன. அவள் இருந்த எழுநிலை மாளிகையில் பாவைவிளக்கு எரிந்துகொண்டிருந்தது.

மழை பொழிந்தவண்ணம் இருந்தமையால் அம் மாளிகையின் கூடல்வாயில் நீர் சொரிந்துகொண்டிருந்தது. அந் நீர் சொரியும் ஓசை அவள் செவிகளில் விழுந்தவண்ணம் இருந்தது. இங்ஙனம் அம் மாலைக் காலத்தில் அவள் தன் காதலன் வரவை எதிர்பார்த்துப் படுக்கையில் கிடந்தாள்.

மாற்றுரை வென்று அவர்தம் நாட்டைக் கைக்கொண்ட தலைவன் தன் பெரும் படையோடு வெற்றிக் கொடி யுயர்த்திக் கொம்பும் சங்கும் வெற்றி முழங்கத் திரும்பினன். அவன் வந்த வழியெங்கும் காடு செழித்திருந்தது. காயா மரங்களில் நீல மலர்கள் பூத்து மிளிர்ந்தன; கொன்றை மரங்களில் பொன்போல் மலர்கள் பூத்துப் பொலிந்தன; காந்தள் முகைகள் காரிகையின் அழகிய கைபோல விரிந்திருந்தன; தோன்றிப் பூக்கள் குருதி போலப் பூத்து விளங்கின. இங்ஙனம் காடு தழைத்துப் பெருவழியிலே உள்ள வரகங் கொல்லையில் ஆண்மான்களோடு பெண்மான்கள் துள்ளி ஓடின. இவ் வின்பக் காட்சிகளைக் கண்ட தலைவனுக்குக் காதல் வேட்கை மிகுந்தது. அவன் தலைவியை விரைந்து சேர விரும்பினன். வினை முற்றி மீண்டு வருந் தலைமகன் வழியில் எங்கும் தங்காமல் விரைந்து தலைமகளைச் சேரவேண்டும் என்பது அகப்பொருள் விதி. இடையில் தங்குவானாயின் அவனுக்குத் தன் மனையாள்மாட்டு விருப்பமில்லை என்றாகும்.

"வினைவயின் பிரிந்தோன் மீண்டு வருகாலை
இடைச்சுர மருங்கில் தவிர்தல் இல்லை"

என்பது தொல்காப்பியம். எனவே, தேரிற் பூட்டிய குதிரையை மிக வேகமாகத் தலைவன் செலுத்தினான். வள்ளியங்காடு விரைவில் பின்னொழிய குதிரை கடுகிச் சென்றது. அங்ஙனம் சென்ற குதிரை கனைத்தது. அதன்

கனைப்பொலி எழுநிலை மாடத்தில் படுக்கையில் கிடந்த தலைவியின் செவியிலே நிறைந்து ஆரவாரித்தது. அவ் ஆர்ப்பொலியைச் செவியேற்ற தலைவியின் நெஞ்சம் எத்துணைப் பூரிப்படைந்திருக்கும் என்று இயம்பவும் வேண்டுமோ ?

இங்ஙனம் முல்லைப்பாட்டு முல்லை ஒழுக்கத்தை நயமுறப் பாடுகிறது. முல்லை ஒழுக்கம் இல்லறத்திற்குரிய மிகச் சீரிய ஒழுக்கமாகும். ஒரு நல்ல செயலை நிறைவேற்றும்பொருட்டுத் தலைவன் தலைவியைப் பிரிகின்றான். அவன் அச் செயலை வெற்றியுடன் நிறைவேற்றி மீளும் வரை தலைவி பிரிவை ஆற்றியிருப்பது இன்றியமையாததாகும். பிரிந்துசெல்லும் தலைமகனுக்குத் தான் மீளும் வரை தலைவி பிரிவை ஆற்றியிருப்பாள் என்ற நம்பிக்கை வேண்டும். அந் நம்பிக்கை அவனுக்கு இருந்தாலன்றி அவன் செல்லும் இடத்தில் தன் சீரிய தொழிலை மன நிறைவோடும் அமைதியோடும் ஆற்ற இயலாது. தனிமைத் துன்பத்தைத் தலைவி தாங்க இயலாதவளாயின் தலைவன் அவளைப் பிரிய இயலாது. எனவே, அவன் தன் வாழ்க்கை வளத்திற்கு வேண்டிய நற்பெருஞ் செயல்களும் ஆற்ற இயலாதவனாவான்.

முல்லைப்பாட்டை நப்பூதனார் முடித்திருக்கும் திறம் வியக்கற்பாலதாகும். தன் தலைவன் வரும் தேரினது குதிரையின் கனைப்பொலி, அவனை எதிர்பார்த்துக் கிடக்கும் தலைவியின் செவியில் ஒலித்தது என்ற அளவோடு அன்றோ ஆசிரியர் அப் பாடலை முடித்திருக்கிறார் ? அவ்வொலி கேட்டதும் தலைவன் வந்துவிட்டான் என்று தலைவி உணர்ந்து முகமலர்ந்தாள்; அவள் நெஞ்சம் பூரித்தது ; பின்பு தலைவன் அவளை அடைந்தான் ; இருவரும் ஈறிலா இன்பத்துள் ஆழ்ந்தனர் என்றெல்லாம்

ஆசிரியர் நம்மை உய்த்துணரச்செய்கிறார். இங்ஙனம் உய்த்துணரச் செய்யாமல் இவையனைத்தையும் சேர்த்து ஆசிரியர் பாடியிருப்பின் இப் பாடல் இத்துணையளவு இன்பம் பயந்திராது.

முல்லையொழுக்கத்தோடு பொருந்திய புறவொழுக்கம் வஞ்சி என்பதை மேலே குறிப்பிட்டோம்.

"வஞ்சி தானே முல்லையது புறனே"

என்பர் தொல்காப்பியர். வஞ்சி என்பது பகையரசன் நாட்டினைக் கைக்கொள்ள படையெடுத்துச் செல்வது. முல்லையொழுக்கத்தில் தலைவி தலைவனைப் பிரிந்து மனையின்கண் இருப்பதுபோல வஞ்சியொழுக்கத்தில் தலைவன் அவளைப் பிரிந்து பாசறையின்கண் இருப்பதாலும், தலைவி வீடு முல்லைக்காட்டில் இருப்பதுபோலத் தலைவனின் பாசறை பகைவர் நகர்க்கு அரணாகவுள்ள காட்டில் இருப்பதாலும் முல்லைக்கு வஞ்சி புறனாயிற்று எனலாம். முல்லை ஒழுக்கத்தை விளக்கிப் பாடும் நப்பூதனார், தலைவன் பகையரசன் நாட்டைக் கைப்பற்றப் படையெடுத்துச் சென்று, பாசறையில் தங்கிப் போரிட்ட திறத்தையும் சேர்த்துக் கூறுகிறார். இது புறத்திணையாகிய வஞ்சியின் பாற் படும். முல்லை காதலையும் வஞ்சி வீரத்தையும் குறிக்கும். எனவே, காதலும் வீரமும் முல்லைப்பாட்டில் விளக்கப்பட்டுள்ளன. இங்ஙனம், முல்லையோடு இயைபுடைய புறத்திணை வஞ்சியையும் நப்பூதனார் இணைத்து முல்லைப்பாட்டைப் பாடியிருப்பது அப் பாட்டின் சிறப்பை மிகுவிக்கிறது.

மேலும், மழைபொழியும் மேகத்திற்கு மாவலி வார்த்த நீரொழுகும் கையையுடைய திருமாலை உவமித்திருப்பதும், வில்லில் அம்பருத்தூணியைத் தொங்கவிட்டிருக்

கும் காட்சிக்குக் காவியுடை தொங்கும் துறவியின் முக் கோலே உவமை கூறியிருப்பதும், உறக்க மயக்கத்தால் அசைந்து செல்லும் மெய்க்காப்பாளருக்குக் காற்றினல் அசையும் தூறுகளே உவமையாகச் சொல்லியிருப்பதும் சுவையுடையனவாய் உள்ளன. இன்னும் தோளில் கைகட்டிக் கன்றை நோக்கிக் கூறும் இடைப்பெண்ணும், பெருமுதுபெண்டிர் விருச்சி கேட்டுவந்து தலைமகளை ஆற்றுவிப்பதும், தலைவி ஆற்ருமல் கலுழ்வதும், பாசறை அமைப்பும், பாகர் யானையை அதட்டிக் கவளமூட்டுவதும், பாசறையில் பாவையர் அவிந்த விளக்கை எரிப்பதும், அரசன் ஒரு கையைப் படுக்கைமீது வைத்தும் மற்ருெரு கையைத் தலைமீது வைத்தும் நீடு நினைந்து இரங்குவதும், தலைவி எழுநிலை மாடத்தில் தலைவன் பிரிவை ஆற்றியிருக்க முயன்று தன் கழலும் அணிகலங்களைச் செறிப்பதும், கூடல்வாயில் சொரியும் நீர் ஓசையை அவள் கேட்டவண்ணம் படுக்கையில் கிடப்பதும் ஆகிய இவை ஒவ்வொன்றையும் நம் கண்முன்னே காணும்படி நப்பூதனுர் சித்திரித்திருப்பது வியக்கற்பாலது.

---

# 8

# அடிசிற்கினியாள்

மகளிர் மனைக்குப் பொலிவுதரும் பான்மையர். மனைத்தக்க மாண்புடைய மகளிரால் மனையின்கண் இன்பம் பெருகும். அவர்கள் பெரிதும் மெல்லிய இயல்பு வாய்ந்தவர்கள். அன்பு, பொறுமை, தியாகம், அமைதி இன்னோரன்ன நற்பண்புகளின் கொள்கலம் அவர்கள். இச் சீரிய பண்புகள் அனைத்தும் இயைந்த இயல்பே பெண்மை எனப்படும். இம் மாண்புமிக்க நீர்மையால் மகளிர் தம் மனையகத்தை இன்புருவாக இலங்கச் செய்கின்றனர். இவ் வுண்மை யுணர்ந்த திருவள்ளுவர், "பெண்ணிற் பெருந்தக்க யாவுள ?" என்று நெஞ்சம் பூரித்துப் பாடுகின்றார். இத்தகைய மகளிரற்ற மனையகம் வேறு பிறவற்றால் எத்துணைச் சிறப்புடையதாயினும் அது பொலிவெய்துவ தாகாது. இதனாலன்றோ, "பாழே மனைக் கொடி இல்லா மனை" என உண்மை யுணர்ந்து உரைத்தனர் நம் அவ்வையம்பெருமாட்டியார் !

பெண்மைப் பண்புகள் பொதிந்த பாவையையுடைய குடும்பம் எஞ்ஞான்றும் ஒன்றுபட்டு ஒப்பிலாத் தன்மைத் தாய்த் திகழுறும். அப் பொன்னன பண்புகள் சிறிதும் இயையப்பெருத பெண்ணையுடைய சுற்றம் சீர்குலைந்து சிதைவுறும். எனவே, பண்பு நிறைந்த பெண் ஒரு குடும்பத்தின் உயிர் எனல் மிகையாகாது.

ஒருவன் தன் வாழ்க்கைத் துணைவியாக வாய்க்கப் பெறும் பாவைக்கு இன்றியமையாத பண்புகளைத் திருவள்ளுவர் வாழ்க்கைத் துணை நலம் என்ற அதிகாரத்தில் நன்கு தொகுத்துரைத்துள்ளனர். அவர் பெண்களுக்குரிய பெரும்பாலான பண்புகளை, "மனைத்தக்க மாண்பு, மனைமாட்சி" என்ற சொற்றெடர்களில் அடக்கிக் கூறியுள்ளனர். இச் சொற்றெடர்களுக்குப் பரிமேலழகர், 'மனையறத்திற்குத் தக்க நற்குண நற்செய்கைகள்' எனப் பொருள் கூறியுள்ளார். மேலும் அவர் கூறுவதாவது, 'நற்குணங்களாவன துறந்தார்ப் பேணலும், விருந்தயர்தலும், வறியார்மாட்டு அருளுடைமையும் முதலாயின. நற்செய்கைகளாவன, வாழ்க்கைக்கு வேண்டிய பொருள்கள் அறிந்து கடைப்பிடித்தலும், அட்டில் தொழில் வன்மையும், ஒப்புரவு செய்தலும் முதலாயின' என்பதாம்.

மனைவியின் மனைத்தக்க மாண்புக்குரிய இயல்புகளில் அட்டில் தொழில் வன்மையும் ஒன்று என்பது கருதற்பாலது. மனைவியின் நற்செயல்களுள் அட்டில் தொழில் வன்மையை முதற்கண் வைத்துப் போற்றுவது பொருத்தமுடையதாகும். 'தற்கொண்டானைப் பேணுவது' மனைவியின் தலையாய கடமைகளுள் ஒன்ருகத் திருவள்ளுவர் கூறுகின்ருர். 'தற்கொண்டான் பேணி' என்பதற்குத் 'தன்னைக் கொண்டவனை (கணவனை) உண்டி முதலியவற்ருற் பேணி' என்றே பரிமேலழகர் பொருள் உரைக்

கின்றனர். கணவன் நனிவிரும்பும் சுவையினை நன்கறியும் தகவு மனைவிக்கன்றி வேறு எவர்க்கு இருக்கமுடியும்? எனவே, அவன் விரும்பும் சுவையுடைய உணவை ஆக்கிப் படைக்கும் ஆற்றல் மனைவிக்கு இன்றியமையாததாகிறது. தன் சுவையறிந்து உணவினைச் சமைத்துப் படைக்கவல்ல மனைவிபால் கணவனுக்கு அன்பு அளவிறந்து மேலிடும் என்று கூறவும் வேண்டுமோ? எத்துணை வன்னெஞ்சம் படைத்த கணவனையும் மனைவி தன் நற்செயல்களால் வயப்படுத்தமுடியும். அவற்றுளே தலையாயது அட்டில் தொழில் வன்மை எனலாம்.

இவ்வுண்மையை உணர்ந்த நம் சான்றோர்கள் பெண்டிருக்கு அட்டில் தொழில்வன்மை மிக இன்றியமையாதது என்பதைத் தம் இலக்கியங்களில் வற்புறுத்தியுள்ளனர்.

தம் ஆருயிர்த் துணைவி இறந்ததைக் குறித்து ஆற்ருமை மீதூர நம் திருவள்ளுவப் பெருந்தகை புலம்பிப் பாடியதாக ஒரு பாடல் தனிப்பாடற்றிரட்டில் உள்ளது. அப்பாடல் திருவள்ளுவர் பாடியதன்று எனவும், இடைக்காலப் புலவர் யாரோ ஒருவர் அதனைப் பாடியிருக்க வேண்டுமென்றும் அறிஞர் கூறுவர். பாடியவர் யாவராயினும் ஆகுக! நமக்கு ஈண்டு வேண்டுவது அப் பாட்டின் பொருளேயாம்.

“ அடிசிற் கினியாளே யன்புடை யாளே
படிசொற் றவருத பாவாய்—அடிவருடிப்
பின்தூங்கி முன்னெழுந்த பேதையே போதியோ
என்தூங்கும் என்கண் இரா ”

என்பதுவே அப் பாடல்.

இதன்கண் திருவள்ளுவர் தம் அன்பிற்குரிய அருமை மனைவியின் பெறலரும் பண்புகளை நினைந்து நினைந்து நெஞ்சம் உருகுகின்றார். அவள் தன் கணவன் விரும்பும் சுவை யறிந்து இனிய உணவுகளை ஆக்கிப் படைக்கும் தன்மையள்; தன் கணவன்பால் அளவிறந்த அன்புடையவள்; தன் கணவன் சொற்படியே எஞ்ஞான்றும் ஒழுகும் ஒப்பற்ற பாவை; தன் கணவன் உறங்கும் போது அவர்தம் திருவடிகளை மெல்ல வருடி அவரை மகிழ்விக்கும் மாண்புடையவள்; கணவன் உறங்கியபின் தான் உறங்கும் இயல்பினள்; கணவன் துயிலுணர்தற்கு முன்பு தான் துயிலுணர்ந்து எழுந்திருக்கும் இயல்பினள்.

"இத்துணைப் பெருங்குணம் படைத்த பேதையே, என்னைப் பிரிந்தனையே! இனி என் கண்கள் இரவில் எவ்வாறு உறக்கங் கொள்ளும்?" என்று திருவள்ளுவர் கதறுகிறார். திருவள்ளுவரே யன்றி வேறு யாவராயினும் இத்துணை மனைமாட்சி மிக்க மனைவியரை இழப்பின் குமுறிக் குமுறிக் கண்ணீர் பெருக்குவர் என்பதைக் கூற வேண்டுவதில்லை. "இவை அனைத்தும் பெண்களை அடிமையுள் ஆழ்த்தும் இயல்புகள் ஆகாவோ?" என்று தற்காலத்துச் செல்வியர் சிலர் ஐயுறுதல் கூடும். அவர்கள் தம் தெளிந்த அறிவைக்கொண்டு இவ் வியல்புகளை ஆழ்ந்து சிந்தித்தல் வேண்டும். தன் குடும்பத்தின் நலன், வளம் ஆகிய இன்னோரன்னவைகளையே கருதி பொறுப்பேற்கும் பாவையின் தியாகத்திற்குரிய இன்றியமையாப் பண்புகளாகும் இவை. இத்தகைய பொற்புடைச் செல்வியைப் பெற்றுள்ள குடும்பம் இக் குவலயத்திலேயே ஒப்பற்றதென அகமகிழ்ந்து பாடுகிறார் நம் வள்ளுவர்.

"இல்லதென் இல்லவள் மாண்பானால் உள்ளதென்
இல்லவள் மாணாக் கடை"

இக்குறளின் பொருளை ஓர்க.

திருவள்ளுவர் தொகுத்துக் கூறும் தம் மனைவியின் பண்புகளுள் முதற்கண் அவள்தன் அட்டில் தொழில் வன்மையைப் பாராட்டி, " அடிசிற்கினியாளே " என்று பாடுவது சிந்திக்கற்பாலது. பெண்களுக்கு அட்டிற் கலை எத்துணை இன்றியமையாதது என்பது இதனின்றும் புலப்படும்.

கண்ணகியும் கோவலனும் காவிரிப்பூம்பட்டினத்தி லிருந்து மதுரையை நோக்கிப் பல நாட்களாகப் பல காவத தூரம் நடந்தனர்; முடிவில் ஆய்ச்சியர் சேரியை அடைந்தனர். அங்கு மாதரி என்னும் நல்லாளின் இல் லின்கண் அவர்கள் தங்கினர். மாதரியின் மகள் ஐயை என்பாள் கண்ணகிக்குத் துணையாய் அமைந்தனள்.

கண்ணகி நல்லியல்பு வாய்ந்த மெல்லியற் பாவை. அவள்தன் மென்மைத் தன்மையை இளங்கோவடிகள் மனமாரப் பாராட்டுகின்றார். அவள்தன்,

" வண்ணச் சீறடி மண்மகள் அறிந்திலள் "

என்பர் அவர். கண்ணகி மண்மீது நடப்பின் அவள்தன் அடிகளை மண்மகளும் அறிய இயலாது; அத்துணை மென்மை வாய்ந்தவை அவள்தன் திருவடிகள் என்பது இவ்வடியின் கருத்தாம். இன்னும் இளங்கோவடிகள் கண்ணகியின் மென்மையை 'இளங்கொடி' 'பூங்கொடி' என்ற சொற்றொடர்களால் போற்றுவர். இவ்வளவு மென்மைவாய்ந்த அப் பாவை சோழநாட்டிலிருந்து பாண்டியநாட்டுக்கு நடந்துசென்றனள் எனின் அவள் எத்துணைச் சோர்வும், களைப்பும், இளைப்பும் அடைந் திருக்கவேண்டும்? ஆனால், அவள் எட்டுணையும் தன் மெய்வருத்தம் பாராது, மாதரி இல்லத்தை அடைந்ததும் தானே தன் கணவனுக்கு உணவு சமைத்துப் படைத்த னள். நல்லிளஞ் செல்வர்களாகிய கண்ணகியையும்

கோவலனையும் தம் விருந்தினராக ஏற்ற இடைக்குலப் பெண்டிர் அவர்களுக்கு விருந்தளிக்கக் கடவர். ஆனால், கண்ணகி அதை விரும்பவில்லை. தானே தன் கைகளால் தன் கணவனுக்குச் சமைத்துப் படைக்கவே அவள் விரும்பினள்.

> '' மெல்விரல் சிவப்பப் பல்வேறு பசுங்காய்
> கொடுவாய்க் குயத்து விடுவாய் செய்யத்
> திருமுகம் வியர்த்தது செங்கண் சேந்தன
> கரிபுற அட்டில் கண்டனள் பெயர
> வையெரி மூட்டிய ஐயை தன்னொடு
> கையறி மடைமையிற் காதலற் காக்கி ''
>
> *(சிலப். கொலைக். 29-34)*

என்று கண்ணகி சமைத்த தன்மையை இளங்கோவடிகள் கூறுகிறார். தனது மெல் விரல் சிவக்கும்வண்ணம் அவள் பல்வேறுவகைப்பட்ட காய்களை அரிவாளால் அரிந்தனள். அவளுடைய அழகிய முகம் வியர்த்தது. ஐயை வைக்கோலால் தீ மூட்டினள். கரிந்த இடமாகிய சமைக்கும் இடத்தில் அவள் உணவாக்கினாள். இதனால் செவ்வரி பொருந்திய அவள் கண்கள் சிவந்தன. இங்ஙனம் கைத்திறம் மிகத் தன் காதலனுக்கு அவள் உணவாக்கினள். அட்டில் தொழிலிலே அவள் கைதேர்ந்தவள் என்பதை 'கைஅறி மடைமை' என்ற சொற்றொடர் குறிக்கிறது. பல காவத தூரம் நடந்த வருத்தம் அவளுக்கு மிகுதியாக இருந்தும் அதைச் சிறிதும் பாராட்டாது தானே தன் கணக்கு உணவு ஆக்கினாள் என்று இளங்கோவடிகள் கூறுவதினின்றும் மனைவியே கணவனுக்குரிய உணவினைச் சமைக்கவேண்டுமென்றும், அட்டிற்கலை அவளுக்கு இன்றியமையாது வேண்டப்படுவதொன்று என்றும் வற்புறுத்தப்படுகின்றமையை உணர்க.

செல்வக்குடியில் தோன்றிய ஒரு நங்கைக்குத் திருமணமாயிற்று. அவள் தன் கணவன் இல்லத்திற்குச் சென்றனள். நாட்கள் பல கடந்தன. அந் நங்கையின் தாய்க்குத் தன் மகளைப்பற்றிய நினைவு வந்தது. தன் அருமை மகள் அவள் தன் இல்லத்தில் நிகழ்த்தும் வாழ்க்கையை அறிய அவள் நெஞ்சம் அவாவியது. அவள் நிகழ்த்தும் வாழ்க்கை முறையினை அறிந்துவரும்படி தன் மகளின் செவிலித்தாயை அனுப்பினள். செவிலித்தாய் மகளின் இல்லத்திற்குச் சென்று, அவள் வாழ்க்கைச் சிறப்பினை நேரில் கண்டு நெஞ்சம் பூரித்தாள். மகளின் வாழ்க்கை முறைகளில் ஒன்று நெஞ்சைத் தொட்டது. அதைத் தாயிடம் திரும்பி வந்து,

"முளிதயிர் பிசைந்த காந்தள் மெல்விரல்
கழுவுறு கலிங்கங் கழாஅ துடீஇக்
குவளை யுண்கண் குய்ப்புகை கமழத்
தான்துழந் தட்ட தீம்புளிப் பாகர்
இனிதெனக் கணவன் உண்டலின்
நுண்ணிதின் மகிழ்ந்தன் ரொண்ணுதன் முகனே"

என்று உரைத்தாள்.

தலைவி தன் கணவனுக்காகப் புளிக்குழம்பு சமைத்ததை இப் பாடல் கூறுகிறது. அவள் காந்தள் மலரைப் போன்ற தன் மெல்லிய விரலால் முற்றிய தயிரைப் பிசைந்தனள். நன்கு தோய்த்துத் தூய்மை செய்யப் பட்ட ஆடையை அவள் அணிந்திருந்தாள். அவள் தயிரைப் பிசைந்த கையோடு குழம்பைத் தாளிக்க எழுந்தனள். அப்போது அவள் அணிந்திருந்த ஆடை இடுப்பிலிருந்து சற்றுச் சரிந்தது. அவள் விரைந்து தயிர் பிசைந்த கையினாலேயே அவ் ஆடையை மீண்டும் நன்கு உடுத்திக்கொண்டு தாளிப்பைச் செய்தாள். கையைக் கழுவிக்கொண்டு ஆடையை உடுத்தினால்

அதற்குள் தாளிப்பின் பதம் கெட்டுவிடும் என்றும் கணவனுக்கு உணவு படைத்தற்குரிய காலமும் தவறிவிடும் என்றும் அவள் அஞ்சினுள். எனவே, கையைக் கழுவாமலேயே அத் தூய ஆடையை அவள் விரைந்து உடுத்திக் கொண்டு இங்ஙனம் புளிக்குழம்பைத் தாளித்தாள். தாளிப்பினது புகை குவளை மலர்போன்ற அவள்தன் மையுண்ட கண்களினூடு சென்று மணம் வீசிற்று. தாளித்த குழம்பினை அவளே துழாவினள். இங்ஙனம் சமைத்த புளிக்குழம்பினைத் தலைவி தானே தன் கணவனுக்குப் படைத்தனள். கணவன் அதனை 'மிக நன்ருயிருக்கிறது!' எனச் சுவைத்துச் சுவைத்து உண்டனன். அப் புளிக்குழம்போடு தன் காதலியின் அளப்பரிய அன்பும் கலந்துள்ளதன்ருே? எனவே, கணவன் அக் குழம்பைச் சுவைத்துண்டதில் வியப்பொன்றுமில்லை. தான் சமைத்த புளிக்குழம்பினைத் தன் கணவன் சுவைத்துண்பதைத் தலைவி கண்டனள். அவள்தன் மனம் மகிழ்ச்சியுள் ஆழ்ந்தது. அம் மகிழ்ச்சியால் அவள் அழகிய முகம் மலர்ந்தது.

கணவன் மனைவியரின் ஒப்பற்றதோர் இன்ப வாழ்வின் சொல்லோவியம் அன்ருே இப்பாடல்? அவ் வின்ப வாழ்விற்கு அடிப்படை இல்லாளின் அட்டில்தொழில் திறமே என்பதை இப் பாடலைப் பாடிய கூடலூர் கிழார் நன்கு தெளிவுறுத்தியுள்ளார்.

கல்வியறிவு நிரம்பிய பெண்டிரும் செல்வக்குடியில் தோன்றிய செல்வியரும் அட்டில் தொழிலை அறவே மறந்தனர். அட்டில் தொழில் புரிவது தமக்கு இழுக்கு எனவும் அவர்கள் கருதலாயினர். இங்ஙனம் கருதுவது பெரும் பேதைமையாம். பெண்தகைமைக்கே அஃது இழுக்காகும். இதனை உணர்ந்து அவர்கள் இனியேனும் அட்டிற் கலையில் ஆர்வங்கொண்டு அதனை வளர்த்து நம் சமுதாயத்தை வளமுறச் செய்வார்களாக!

# 9

# மறத்தற்கரிது

காதல் ஒழுக்கம் களவு, கற்பு என இரு வகைப்படும். அழகு, அறிவு, பண்பு முதலியவைகளால் ஒத்த ஒருவனும் ஒருத்தியும் தற்செயலாய் எதிர்ப்பட்டு ஒருவரை ஒருவர் உளமாரக் காதலித்தொழுகுவர். இவ்வாறு அவர்தம் காதலொழுக்கம் பிறருக்குத் தெரியாமல் மறைவாகப் பலநாட்கள் நிகழும். பின்பு அவரவர்தம் பெற்ருேர்கள் அறிய இருவரும் திருமணம் செய்துகொண்டு இல்லறம் நிகழ்த்துவர். இருவருக்கும் திருமணம் நிகழும்வரை நிகழ்கின்ற ஒழுக்கம் களவு எனப்படும்; திருமணம் செய்துகொண்டு இல்லறம் நடத்துவது கற்பெனப்படும்.

தலைவனும் தலைவியும் பிரிந்திருக்கும்போதுதான் அவ் விருவர்தம் காதல்பெருக்கு நன்கு புலனுகும். இதனுலேயே சங்ககாலப் புலவர்கள் காதலரின் பிரிவை உணர்த்தும் பாலைத்திணைப் பாடல்களை மிகுதியாகப் பாடினர். பழங்காலத்தில் தலைவன் கல்வியின்பொருட்டும், போரின் பொருட்டும் அரசியல் தூதின் பொருட்டும் பிரிவான். நாட்டைக் காக்கும் பொருட்டும், பொருளீட்டும் பொருட்டும் பிரிவதுமுண்டு.

பிரிந்த தலைவன் திரும்பி வரும்வரை தலைவி பிரிவுத் துன்பத்தைப் பொறுத்துக்கொண்டிருப்பாள். கார்ப் பருவமும், மாலை நேரமும், அந் நேரத்தில் நெஞ்சைக் கவரும்

இயற்கைக் காட்சிகளும் அவள் துன்பத்தை மிகுவிக்கும். எனினும், அவள் நெஞ்சழியாமல் அதை ஒருநிலையில் நிறுத்தித் தன் தலைவனையே நினைந்தவண்ணம் இருப்பாள். இதுவே முல்லைத் திணை எனப்படும். திணை என்பது ஒழுக்கம்.

ஒரு தலைவன் தான் மேற்கொண்ட செயலை முடித்துக் குறித்த பருவத்தில் திரும்புகின்றான். வழியில் வரும்போது அவனுக்குத் தலைவியின் நினைவு வருகின்றது. முன்பு ஒருமுறை அவன் இவ்வாறு தன் தலைவியைப் பிரிந்து சென்று மீண்டபோது நிகழ்ந்த ஒரு நிகழ்ச்சி அவன் நினைவுக்கு வருகின்றது. இப்போது போலவே அப்போதும் கார்காலம். கடுங்கோடையால் பல நாட்களாக வறண்டு கிடந்த நிலமெங்கும் மழைபெய்து பள்ளங்கள் எல்லாம் நீர் நிரம்பியது. உலகத்து உயிர்கள் மகிழ்வுடன் தத்தம் தொழிலை மேற்கொள்ளலாயின. நீர் நிறைந்த பள்ளங்களில் தவளைகள் நிறைந்து ஒலித்தன.

தலைவன் சேய்மைக்கண் வரும்போதே அவன் ஊர்ந்துவரும் தேரின் மணியொலி மனையிலிருக்கும் தலைவிக்குக் கேட்கும். தலைவி மணியொலி கேட்டதும் மகிழ்ச்சிகூர்ந்து, விரைந்து நீராடித் தன்னை நன்கு அணி செய்துகொண்டு, தலைவன் வரவை எதிர்நோக்கி நிற்பாள். தலைவி தன் தலைவனைப் பிரிந்திருக்கும்போது நீராடமாட்டாள்; தன்னை அணிசெய்துகொள்ளவும் மாட்டாள்; அவனையே நினைந்து நினைந்து நெஞ்சுருகிய வண்ணம் இருப்பாள். தலைவனோடு இருக்கும்போதுதான் அவள் அவன் உள்ளங் கவரும்வண்ணம் தன்னை அலங்கரித்துக் கொள்வாள்.

முன்பு தலைவன் திரும்பியபோது எங்கும் தவளைகளின் ஒலி மிகுதியாக இருந்ததால் தன் தேரின் மணி

யொலி தன் தலைவிக்குக் கேட்காது என்பதை உணர்ந்த னன். எனவே, அவன் தன் வரவைத் தலைவிக்கு முன்னே சென்று அறிவிக்கும்படி தன் ஏவலாளரை அனுப்பினுன். அவர்கள் அங்ஙனமே சென்று அவளுக்கு அறிவித்தார்கள். அவளுக்கு மகிழ்ச்சி பொங்கியது. அது வரை நீராடாத அவள் நீராடினுள்; தன் கூந்தலைச் சீவி ஒப்பனை செய்தாள்; அணிகலன்களைப் பரபரப்புடன் அணிந்தாள்; தன் கூந்தலுக்கு மலரை மிக விரைந்து சூடினுள். அதற்குள் தலைவன் மனையைஅடைந்து அவள் அறைக்குள் நுழைந்தனன். அவனைக் கண்டதும் தலைவி தன் மெய் துவள அணுகித் தன் கூந்தல் அவிழ்ந்து குலைய அவனை அணைத்துக்கொண்டாள். இவ் வின்ப நிகழ்ச்சியைத் தலைவன் இப்போது தன் தேரைச் செலுத்தும் பாகனுக்குக் கூறுகிருன். கூறி, "இவ்வாறு முன்பு கற்பிற் சிறந்த தலைவி என்னை அணைத்து மகிழ்ந்த தன்மையை என்னுல் மறக்கமுடியவில்லை" என்கிருன்.

இது கீழ்வரும் நற்றிணைப் பாடலில் அமைந்துள்ள கருத்தாகும்.

"மறத்தற் கரிதால் பாக பன்னுள்
வறத்தொடு பொருந்திய உலகுதொழிற் கொளீஇய
பழமழை பொழிந்த புதுநீர் அவல
நாநவில் பல்கிளை கறங்க நாவுடை
மணியொலி கேளாள் வாணுதல் அதனுல்
ஏகுமின் என்ற இளையர் வல்லே
இல்புக் கறியுந ராக மெல்லென
மண்ணுக் கூந்தன் மாசறக் கழீஇச்
சில்போது கொண்டு பல்குரல் அழுத்திய
அந்நிலை புகுதலின் மெய்வருத் துருஅ
அவிழ்பூ முடியினள் கவைஇய
மடமா அரிவை மகிழ்ந்தயர் நிலையே"

இப் பாடலைப் பாடியவர் கீரத்தனர் என்னும் புலவ ராவர். இதன்கண் காதற்சுவை ஊற்றெடுப்பதைக் காண லாம். உலகத்து உயிர்கள் தத்தம் தொழிலை மேற்கொள் ளும்பொருட்டு வறண்ட நிலத்தில் மழை பொழிந்து புது நீர் எங்கும் பெருக்கெடுத் தோடிற்று என்ற பொருள் அமைந்த,

"வறத்தொடு பொருந்திய உலகுதொழிற் கொளீஇய
பழமழை பொழிந்த புதுநீர்..."

எனும் இவ் வடிகளால் காதலுக்குரிய இன்பச் சூழ்நிலை யைக் கவி உண்டாக்கியுள்ளார். 'வறத்தொடு பொருந் திய' என்பது தலைவனைப் பிரிந்த தலைவியினது துன் பத்தை உணர்த்துகின்றது. 'உலகுதொழிற் கொளீஇய பழமழை பொழிந்த புதுநீர்' என்பது தலைவி தலைவனை எதிர்பார்க்கும் இன்ப நிலையை உணர்த்துகின்றது. பள் ளங்கள் எங்கும் நீர்நிறைந்த மகிழ்ச்சி மேலீட்டால் தவளைகள் ஒலித்தன என்பதினின்றும் தலைவனை எதிர் நோக்கியிருக்கும் தலைவியது மகிழ்ச்சியையும் தலைவியை நாடிச் செல்லும் தலைவனது மகிழ்ச்சியையும் நாம் உய்த் துணருமாறு செய்கிறார் கவி. தவளைகளின் பேரொலி யால் தன் தேரின் மணியொலி தலைவிக்குக் கேட்காமல் போய்விடுமோ என்ற அச்சத்தால் தலைவன் முன்னதாகத் தன் வரவைத் தலைவிக்கு ஏவலாளர் வாயிலாகச் சொல்லி அனுப்பியதினின்றும் தலைவியது பிரிவுத் துன்பத்தை மிக விரைவில் நீக்கவேண்டுமெனும் தலைவனது காதல் நுட்பம் புலனாகிறது. தலைவன் திரும்பிவரும் செய்தி அறியும்வரை தலைவி நீராடாமலும் தன்னை அலங்கரித்துக் கொள்ளாமலும் கூந்தலுக்கு மலர்சூடாலும் இருந்தாள் என்பதினின்றும் அவளுடைய கற்பு மேம்பாடு விளங்கு கிறது. தலைவன் வரவை அறிந்ததும் அவள் பரபரப்புடன் நீராடி அணிகலன்களை அணிந்து தன் கூந்தலுக்கு மலர்

கூடினுள் என்பதிலிருந்து தலைவன்பால் அவளுக்குள்ள அளப்பரிய காதலுள்ளத்தை உணரலாம். அவள் தன்னை அலங்கரித்துக்கொள்ளுதற்குள் தலைவன் அவளுடைய அறைக்குள் நுழைந்தனன் என்பதிலிருந்து தலைவியைக் காணவேண்டுமெனும் அவனுடைய பேரார்வம் புலனுகிறது. அவனைக் கண்டதும் தலைவி தான் அரைகுறையாக அலங்கரித்திருப்பதை மறந்து மெய் துவள அவனை அடைந்து அணைத்துக்கொண்டாள் என்பதினின்றும் அவளது காதலுணர்ச்சியின் உச்சநிலை தெளிவாகிறது. முன் நிகழ்ந்த இவ் வின்ப நிகழ்ச்சியைத் தலைவன் இப்போது தன் தேர்ப்பாகனுக்கு உணர்த்தும் வாயிலாகத் தான் தலைவியை விரைந்து அடையவேண்டுமென்றும் அதற்காகத் தேரை விரைவாகச் செலுத்தவேண்டுமென்றும் தேர்ப்பாகன் உணருமாறு செய்கிருன். இவ்வாறு இச் செய்யுளின் ஒவ்வொரு சொற்றொடரிலும் நயம் அமைந்து, பொருள் நிறைந்து கற்போர் உள்ளத்தை இன்ப வெள்ளத்துள் ஆழ்த்துகிறது. இதுபோலவே நற்றிணையிலுள்ள நானூறு பாடல்களும் சுவை நிரம்பியனவாகும்.

சங்ககாலத்து அகப்பொருள் பாடல்களின் அடிகளை யொட்டித் தொகைநூல்கள் தொகுக்கப்பட்டன. எட்டு அடிக்குக் குறைவான நானூறு பாடல்களைக் குறுந்தொகையெனத் தொகுத்தனர்; பன்னிரண்டு அடிக்கு மேலும் முப்பத்திரண்டு அடிக்குள்ளும் அமைந்த நானூறு பாக்களை நெடுந்தொகை எனத் தொகுத்தனர். இஃது அகநானூறு எனவும்படும். ஒன்பதடி முதல் பன்னிரண்டடி வரையிலுள்ள நானூறு பாக்களை நற்றிணை எனத் தொகுத்தனர். நற்றிணை என்பதற்கு நல்லொழுக்கம் என்பது பொருள். நல்ல காதலொழுக்கத்தை நற்றிணைப் பாடல்கள் நயம்படப் பாடுகின்றன. தமிழின் தீஞ்சுவையின்பத்தினை நற்றிணையில் நன்கு பெற்றுத் திளைக்கலாம்.

# 10

# வள்ளுவர் கண்ட சமுதாயம்

---

மக்கள் கூடிவாழும் இயல்பினர். ஆனல், அவர்கள் ஒருவருக்கொருவர் பண்பினல் மாறுபட்டவராய் உள்ளனர். உலகில் எத்துணை மக்கள் உள்ளனரோ அத்துணை வேறுபட்ட இயல்புகள் உள்ளன எனலாம். இதனல் பிணக்கும் காழ்ப்பும் போரும் இன்ன பிறவும் தோன்றி, மக்கள் வாழ்க்கையில் துன்பம் மிகுகின்றது. பல்வேறு இயல்புடைய மக்கள் ஒன்றுபட்டாலன்றி இத் துன்பங்கள் நீங்கா. ஆனல், ஒன்றுபடுவது எங்ஙனம்? இதற்குரிய விழுமிய வழிகளையே திருவள்ளுவர் வகுத்துள்ளார். அவர் வகுத்துள்ள வழியின்கண் மக்கள் நிற்பின், பல்வேறுபட்ட இயல்பினராயினும் அவர்கள் ஒருமித்து இன்பமாக வாழ இயலும்.

திருவள்ளுவர் முதற்கண் இல்லற வாழ்க்கையைச் சிறப்பித்துரைக்கிருர். மக்கள் அனைவரும் இல்லற வாழ்க்கையை மேற்கொள்ளவேண்டும் என்பது திருவள்ளுவரின் கருத்து. இவ் இல்லறமே மக்களைப் பல்வகையிலும் பண்படுத்த வல்லதாகும். இல்லறமாவது, காதலால் ஒன்றுபட்ட ஒருவனும் ஒருத்தியும் இல்லின்கண் இருந்து நெறிப்பட நிகழ்த்தும் வாழ்க்கையாம். ‘இல்லற

மாவது இல்வாழ்க்கை நிலைக்குச் சொல்லுகின்ற நெறிக் கண் நின்று அதற்குத் துணையாகிய கற்புடை மனைவி யோடுஞ் செய்யப்படுவது' என்று பரிமேலழகர் கூறுகிறார்.

இல்லறம் நிகழ்த்தும் கணவனும் மனைவியும் உண் மைக் காதலால் கட்டுண்டு, கருத்தொருமித்தவராய் விளங் குதல் வேண்டும். இல்லறத்திற்கு அடிப்படையாய் அமைவது அவர்கள் இருவரும் ஒருவர்க்கொருவர்பால் கொண்டுள்ள காதலேயாம். அவர்தம் வாழ்க்கையின் நடைமுறைகள் செம்மையாய் நடைபெறுதற்கு இருவர் மனமும் ஒன்றுபடவேண்டும். இரு உள்ளங்களையும் ஒன்றுபடுத்துவது காதலேயாகும். அவர்களிடையே அக் காதல் அரும்பி மலர்தல் இன்றியமையாத தாகும். ஆகவே, ஒருவனும் ஒருத்தியும் கணவனும் மனைவியுமாக ஆதற்குமுன்பு, அவர்களிருவரும் ஓரளவு பழகி, ஒரு வரை ஒருவர் நன்குணர்ந்து, அவனின்றி அவளும் அவளின்றி அவனும் வாழமுடியாது என்ற நிலை உருவாக வேண்டும். இதுவே களவொழுக்கம் எனப்படும். 'கள வும் கற்று மற' என்ற மூதுரை இக் களவொழுக்கத் தையே குறிப்பதாகும். ஒருவர் வாழ்க்கையில் இக் கள வொழுக்கம் ஒருமுறையே நிகழ்தல் வேண்டும் என்றும் இன்னொரு முறை நிகழ்தல் கூடாது என்றும் இம் மூதுரை வற்புறுத்துகிறது.

திருவள்ளுவர் தம் நூலில் காமத்துப்பால் என்ற பகுதியில் களவொழுக்கத்தில் காதலர்களிடையே அரும்பி மலரும் தூய காதலின் பெற்றியைக் கவிச்சுவையாம் அமிழ்த வெள்ளம் ஊற்றெடுக்கும்வண்ணம் பாடியுள் ளார். இன்னும் அப் பகுதியின்கண் அவர்கள் திருமணம் செய்துகொண்டு வாழ்க்கையில் ஈடுபடுங்கால் காதல் முற் றிக் கனியும் நீர்மையும் சுவைபடக் கூறப்பட்டுள்ளது. இது கற்பியல் எனப்படும்.

ஒரு தலைவனும் தலைவியும் தற்செயலாக எதிர்ப்பட்டு ஒருவரை யொருவர் காதலிக்கின்றனர். தலைவியின்றித் தான் இனி வாழமுடியாது என்று தலைவன் உணர்கிறன்; அவளையே தன் வாழ்க்கை ஒளியாகக் கருதுகிறன். கண்ணுக்கு ஒளி தருவது அதன்கண்ணுள்ள கருமணியாகும். கருமணி நீங்கின் பார்வையும் நீங்கும். அது போலத் தன் வாழ்க்கைக்கு ஒளி தருபவள் தன் தலைவியே யாவள் என்று அவன் நினைக்கிறன்; அவள் இன்றேல் தன் வாழ்க்கை இருளடைந்துவிடும் என்றும் உணர்கிறன்; தன் கண்ணின் கருமணியினும் அவளைப் பெரிதாகப் போற்றுகிறன். அவளைத் தன் கண்ணுள்ளேயே வைத்து இடையருமல் கண்டு இன்புற வேண்டுமென்று கருதுகிறன். அவன் அக் கருமணியைப் "பாவாய்!" என விளித்து, "நீ என் இடத்தினின்றும் நீங்குவாயாக! என் அருமைத் தலைவிக்கு என்கண் இடந்தருதற்கு நின் இடத்தினும் வேருெரு சிறந்த இடம் இல்லை. நீ இருக்கும் இடத்திலே அவளை இருத்தி இன்புற விழைகிறேன். எனவே நீ செல்க!" என்று கூறுகிறன்.

"கருமணியிற் பாவாய்நீ போதாய்யாம் வீழும்
திருநுதற் கில்லை இடம்"

என்பது திருக்குறள். இதனின்றும் தலைவிபால் தலைவன் கொண்டுள்ள காதற்பெருக்குப் புலனுகும்.

சிவபெருமான் தம் காதலியாம் உமாதேவியைத் தம் உடலில் ஒரு பாகத்தில் கொண்டுள்ளார். திருமால் தம் மனைவியாகிய திருமகளைத் தம் மார்பில் கொண்டுள்ளார். அயன் தம் துணைவியை நாவில் கொண்டுள்ளார். இவ்வாறு முப்பெரும் கடவுளர்களாகிய இவர்கள் தத்தம் மனைவியரை வைத்துப் போற்றும் இடங்களினும் திருவள்ளுவர் படைத்த காதலன் தன் காதலியை வைத்துப் போற்றுமிடம் எத்துணைச் சிறந்தது என்பதை ஓர்க.

இராவணன் எப்படியும் சீதையைக் கவர்ந்துவர வேண்டுமென்ற நோக்கத்தோடு அவனைத் தூண்டும் சூர்ப்பநகை அவனை நோக்கி, "சிவபெருமான் தன் மனைவியைத் தன் இடப்பாகத்தில் வைத்துள்ளான்; திருமால் தன் திருமகளை மார்பில் வைத்துள்ளான்; அயன் தன் கலைமகளை நாவில் வைத்துள்ளான். நீ சீதையைக் கவர்ந்துவந்து மனைவியாகக் கொண்டபின் அவளை எவ்வாறு வைத்துப் போற்றுவாய்?" என்றனள்.

"பாகத்தில் ஒருவன் வைத்தான்
பங்கயத் திருந்த செல்வி
ஆகத்தில் ஒருவன் வைத்தான்
அந்தணன் நாவில் வைத்தான்
மேகத்தில் பிறந்த மின்னை
வென்றநுண் ணிடையி னாளை
மாகத்தோள் வீர பெற்றால்
எங்ஙனம் வைத்து வாழ்தி"

இங்கு, இராவணன் சீதையைத் தன் கண்ணுள் வைத்துப் போற்றவேண்டுமெனச் சூர்ப்பநகை கூறியதாகக் கம்பன் பாடவில்லை. இதனின்றும் கம்பனின் கற்பனையிலும் திருவள்ளுவரின் காதல் கற்பனை சிறந்து விளங்குமாறு அறிக.

இவ்வாறே தலைவன்பால் தலைவி கொள்ளும் கரையற்ற காதலின் நீர்மையைத் திருவள்ளுவர் பல பாடல்களில் பாடியுள்ளார். தலைவி தன் தலைவனையே இடையறுது எண்ணியவண்ணம் இருக்கிறுள்; அவன் தன் நெஞ்சினுள் உறைவதாகவே அவள் நினைக்கிறுள்; இதனுல் வெப்பமான எந்தப் பொருளையும் உண்பதற்கு அஞ்சுகிறுள்; வெப்பமுடைய பொருளை உண்டால் அது தன் நெஞ்சினுள் சென்று அங்கு உறைகின்ற தன் அருமைக் காதலனைச் சுட்டுவிடும் என்று கருதுகிறுள்.

" நெஞ்சத்தார் காத லவராக வெய்துண்டல்
அஞ்சுதும் வேபாக் கறிந்து "

என்ற இக்குறளினின்றும் தலைவியது எல்லையற்ற அன்பு தெளிவாகிறது. இவையெல்லாம் களவொழுக்கம் நிகழ்த்தும் காதலர்களின் அன்பின் திறத்தை உணர்த்துவனவாம். இவ் அன்பு திருமணமான பின்பு அவர்கள் நிகழ்த்தும் கற்பொழுக்கத்தில் முதிர்ச்சி எய்துகிறது.

தலைவன் தன் இல்லற வாழ்க்கை இனிதே நடைபெறுதற்கு வேண்டிய பொருளை ஈட்டுதற்குத் தலைவியைப் பிரிந்து வேற்றுநாட்டிற்குப் போகவேண்டிய நிலை ஏற்படுவதுண்டு. இன்னும் அரசியல் தொழிலையொட்டியும் மேலும் கல்வி கற்றுத் தன் அறிவைப் பெருக்குதற்கும் அவன் தலைவியைப் பிரிவதுண்டு. அப் பிரிவுக் காலங்களில்தான் தலைவன் தலைவியரிடையே உள்ள அன்பின் பெருக்கு நன்கு புலனுகும். தலைவி அப் பிரிவுத் துன்பத்தைத் தாங்க இயலாது பெரிதும் துன்புறுவாள். பிரிந்த தலைவனும் தான் மேற்கொண்ட செயல் நிறைவேறியதும் தலைவியை நினைந்து விரைந்து அடைவான்.

தலைவி, தன் தலைவன் பிரியப்போகிருன் என்பதைக் குறிப்பாக உணர்கிருள்; தன்னுல் அப் பிரிவுத் துன்பத்தைத் தாங்கமுடியாது என்றும் அஞ்சுகிருள். அவள் தன் தோழியை நோக்கி, " என் உயிர் உடலைவிட்டு நீங்காமல் இருக்கவேண்டுமாயின், தலைவர் என்னைவிட்டுப் பிரியாமல் இருக்கும்படி செய்க! அவர் என்னைப் பிரிந்தால் என் உயிரும் உடலைவிட்டுப் பிரிந்துபோய்விடும். எனவே, அவரைப் பின்பு நான் அடையவே முடியாது" என்று கூறுகிருள்.

" ஓம்பின் அமைந்தார் பிரிவோம்பல் மற்றவர்
நீங்கின் அரிதால் புணர்வு "

இவ்வாறு கற்பொழுக்கத்தில் தலைவன் தலைவியர் காதல் முதிர்ந்து கனிவதாகும்.

இல்லறத்தை மேற்கொள்பவர் இத்தகைய உண்மைக் காதல் உடையவர்களாய் விளங்க வேண்டுமென்பது திருவள்ளுவரின் உள்ளக்கிடக்கை. முதலில் இவ் இருவரிடத்து வேரூன்றிய இவ் உண்மை அன்பு நாளடைவில் தம் மக்கள், சுற்றம், நட்பினர், ஊரார், உலகத்தார் ஆகியோரிடத்துப் பரவும் தன்மையுடையதாகும்.

இல்லறத்திற்கு விருந்தோம்பலையும் பகுத்துண்டலையும் அடிப்படை அறங்களாகத் திருவள்ளுவர் வகுத்துள்ளார். இல்லறத்தை மேற்கொண்டு ஒழுகுபவர்கள் நன்னெறி நின்று பொருளீட்டித் தாமும் தம் சுற்றமும் வளமுற வாழ்வதோடு, நன்முறையில் வாழ வசதியற்ற ஏனையோரையும் அவர்கள் வாழ்விகக வேண்டுவராவர். இல்வாழ்வான் என்பான் இயல்புடைய மூவர்க்குத் துணையாதல் வேண்டுமென்றும், இன்னும் அவன் துறந்தார்க்கும் துவ்வாதவர்க்கும் இறந்தார்க்கும் துணையாதல் வேண்டும் என்றும், அவன் தன் வருவாயைக்கொண்டு தென்புலத்தார், தெய்வம், விருந்தினர், சுற்றத்தார் ஆகியோரையும் தன்னையும் ஓம்பவேண்டும் என்றும், இவ்வாறு தான் ஈட்டும் பொருளை ஏனையோர்க்கும் பங்கிட்டுக் கொடுத்து வாழ்வானாயின் அவன் வாழ்க்கை எஞ்ஞான்றும் வளமுறும் என்றும் திருவள்ளுவர் கூறுகிறார்.

“இல்வாழ்வான் என்பான் இயல்புடைய மூவர்க்கும்
நல்லாற்றின் நின்ற துணை”

“துறந்தார்க்கும் துவ்வா தவர்க்கும் இறந்தார்க்கும்
இல்வாழ்வான் என்பான் துணை”

"தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்கல் தான்என்ருங்
ஐம்புலத்தா றோம்பல் தலை"

"பழியஞ்சிப் பாத்தூண் உடைத்தாயின் வாழ்க்கை
வழியெஞ்சல் எஞ்ஞான்றும் இல்"

அவர் கூறும் 'இயல்புடைய மூவராவார்', "ஆசாரிய னிடத்தினின்று ஓதுதலும் விரதங் காத்தலுமாகிய பிரம சரிய ஒழுக்கத்தானும், இல்லைவிட்டு வனத்தின்கண் தீயொடு சென்று மனையாள் வழிபடத் தவஞ்செய்யும் ஒழுக்கத்தானும், முற்றுந் துறந்த ஒழுக்கத்தானும் என இவர்" என்பர் உரையாசிரியர் பரிமேலழகர். ஒரு சிலர், திருவள்ளுவர் அடுத்த குறளில் கூறும் துறந்தார், நல் கூர்ந்தார், இறந்தார் ஆகிய மூவருமே 'இயல்புடைய மூவராவார்' என்பர்.

பழங்காலத்தில் வேற்றூரிலிருந்து வருபவர்கள் உணவு கொள்ளுதற்கும் தங்குதற்கும் தற்காலத்து இருப் பனபோல் உணவு விடுதிகள் (Hotels) இல்லை. ஓர் ஊரின்கண் வாழ்பவர் வேற்றூரிலிருந்து வருபவர்களை இன்முகத்தோடு தம் இல்லின்கண் வரவேற்று விருந் தோம்பி அவர்களை மகிழ்விப்பர். விருந்தோம்பல் இல் லறத்தார்க்குத் தலையாய அறமாகக் கருதப்பட்டது.

ஏமமாபுரத்து மக்கள் வீதியில் செல்பவர்களைத் தம்மில்லத்திற்கு வந்து விருந்துண்டு செல்லுமாறு மிக வும் வருந்தி அழைப்பர் என்று சிந்தாமணி ஆசிரிய ராகிய திருத்தக்கதேவர் பாடுகிருர்.

"வளையறுத் தனையன வாலரி யமைபதம்
அளவறு நறுநெயொ டடுகறி யமைதுவை
விளைவமை தயிரொடு மிசைகுவிர் விரையுமின்
உளவணி கலமெனும் உரையின தொருபால்"

" எம் இல்லில் சங்கை அறுத்தாற் போன்றனவாகிய வெண்மையான அரிசிகொண்டு ஆக்கிய சோற்றையும், அளவற்ற நெய்யிட்டுச் சமைத்த கறியையும், சுவைபட அமைத்த துவையலையும், முற்றிய தயிரையும் உண்ண லாம் ; விரைந்து வாருங்கள். எம் இல்லின்கண் வந்து விருந்துண்பீர்களாயின், அன்பளிப்பாக உங்களுக்கு அணிகலன்களும் தருவோம்" என்ற இவ்வுரை வீதியின் ஒரு பக்கத்தே கேட்கும் என்பது இப்பாடலின் பொரு ளாம்; இதனின்றும் எவ்வாறு விருந்தோம்பலைப் பழந் தமிழ் மக்கள் போற்றினர் என்பதை உணரலாம்.

விருந்தோம்பலை இல்லறத்திற்கு அடிப்படை அறமா கத் திருவள்ளுவர் ஓதுகின்றார். ஒருவன் தன் இல் லின்கண் மனைவியோடு இருந்து வாழ்வது, வரும் விருந் தினரை ஓம்பி, அவர்களுக்கு வேண்டிய உதவிகளைச் செய்யும் பொருட்டேயாம் என்பர் திருவள்ளுவர்.

" இருந்தோம்பி இல்வாழ்வ தெல்லாம் விருந்தோம்பி
வேளாண்மை செய்தற் பொருட்டு"

என்பது குறள்.

விருந்தோம்பலை வேள்வி என்றே வள்ளுவர் சிறப்பிப்பர்.

" இனைத்துணைத் தென்பதொன் றில்லை விருந்தின்
துணைத்துணை வேள்விப் பயன்"

விருந்தோம்பலாகிய வேள்வியின் பயன் குறிப் பிட்ட அளவுடையதன்று. விருந்தினரின் தகுதி எத் துணைப் பெருமையுடையதோ அத்துணைப் பேரளவினது விருந்தோம்பலின் பயன் என்ற பொருளுடைய இக் குறட்பாவில் விருந்தோம்பலை வேள்வியெனத் திருவள் ளுவர் குறிப்பிடுவதைக் காண்க.

ஒருவன் தன் உடைமையைப் பலர்க்கும் பயனுடைய தாகச் செய்தல் வேண்டும் என்பதைத் திருவள்ளுவர் "ஒப்புரவறிதல்" என்ற அதிகாரத்திலும், "ஈகை" என்ற அதிகாரத்திலும் பலபடியாக வற்புறுத்திக் கூறு கிருர். பிறர்க்கு உதவி செய்தற்பொருட்டே முயன்று பொருளை ஈட்டவேண்டும் என்றும், ஊர்க்குளத்தில் நீர் நிறைந்திருந்தால் அந் நீர் எவ்வாறு ஊரார் அனைவருக்கும் பயன்படுமோ அதுபோல உலகத்தார் விரும்பும் பண்பும் பேரறிவும் படைத்த பேரறிஞரின் செல்வம் எல்லோர்க்கும் பயன்படுவதாகும் என்றும் வள்ளுவர் உரைக்கிருர்.

"தாளாற்றித் தந்த பொருளெல்லாம் தக்கார்க்கு
வேளாண்மை செய்தற் பொருட்டு"

"ஊருணி நீர்நிறைந் தற்றே உலகவாம்
பேரறி வாளன் திரு"

தன்னிடம் உதவி வேண்டி வந்த ஏழை மீண்டும் பிறரிடம் சென்று இரக்காமல்படி அத்துணை அளவு பொருளை அவனுக்குக் கொடுத்து ஒருவன் உதவுதல் வேண்டும் என்றும், ஏழையர்க்குப் பொருள் ஈந்தால் மேலுலகம் அடையமுடியாது என்ருலும், கொடுத்து உதவுதலே நல்லதாகும் என்றும் திருவள்ளுவர் கூறு கிருர். இதனுல் பொருளுடையோர்கள் பொருளற்ற ஏழையர்க்கு உதவி, அவர்களுடைய வாழ்க்கையையும் வளம்படுத்தவேண்டும் என்பது திருவள்ளுவரின் உறுதி யான கருத்து. தாம் பெற்ற செல்வங்கள் அனைத்தும் தமக்கே உரிமையுடையவை என்று செல்வர்கள் கருது வது தவருகும். அவர்தம் நல்வினைப் பயனுல் அவர்கள் பெருஞ் செல்வம் அடையும் பேறு பெற்றுள்ளனர். தம் நல்வினைப் பயனுல் இறைவன் பெருஞ் செல்வத்தைத் தம்மிடம் ஒப்படைத்துள்ளார் என்றும், அச் செல்வத்திற்

குத் தாங்கள் காப்பாளர்களே (Trustees) யன்றி, அதற்கு உரிமையுடையவர் அல்லர் என்றும் செல்வர்கள் உணர்ந்து அச் செல்வத்தைப் பலரும் நுகரும் வண்ணம் அவர்கள் நல்வழியில் செலவுசெய்தல் வேண்டும். ஒரு சமுதாயம் நன்முறையில் வளர்தற்குத் திருவள்ளுவர் வகுத்த வழி இதுவேயாம். இக் கருத்தையே காந்தியடிகளும் தம் வாழ்நாளில் வற்புறுத்தி வந்தார்.

ஏழையர்க்குத் தாமே மனமிரங்கி ஒரு சிறிதும் கொடுத்துதவாத செல்வர்களைத் திருவள்ளுவர் கயவராகக் கருதுகிருர். செல்வர்கள் ஏழையர்களின் வறுமையைப் போக்க முனையாராயின் நாளடைவில் நாட்டில் வறுமைக் கொடுமை மிகுந்து, முடிவில் செல்வர்கள் அச்சுறுதலுக்கும், வன்மையான தாக்குதலுக்கும் ஆளாக நேரிடும் என்பது அவர் கருத்து. அப்போது அவர்கள் தம் உயிருக்கு அஞ்சித் தம் பொருளைப் பிறர்க்குக் கொடுக்கவேண்டிய நிலை ஏற்படுவதாகும்.

"ஈர்ங்கை விதிரார் கயவர் கொடிறுடைக்குங்
கூன்கையர் அல்லா தவர்க்கு"

தம் கன்னத்தில் அறைந்து தம்மைத் துன்புறுத்தியவர்களுக் கல்லாமல் கயமைத் தன்மை வாய்ந்தவர் தாம் உண்ட எச்சில் கையைக்கூடப் பிறரிடம் உதறமாட்டார்கள் என்ற பொருளமைந்த இக் குறள் மேற்கூறிய கருத்துக்கள் அனைத்தையும் அடக்கிக் கூறுவதாகும்.

மக்களின் இவ் வுலகியல் வாழ்க்கை பொருள் நிலையை யொட்டியதாகும். ஒரு சமுதாயத்தில் அமைதியான வாழ்வு நிலவவேண்டுமானுல் முதற்கண் எல்லோரும் ஓரளவு வாழ்க்கைக்குப் போதிய பொருளுடையவராதல் வேண்டும். இத்தகைய வாழ்வளிப்பது அரசியலாரின் கடமையே யேனும் நாட்டிலுள்ள பெருஞ் செல்

வர்கள் இதற்கு உறுதுணையாய் அமைந்தாலன்றி இச் சீரிய நிலையை உருவாக்குதல் அரிது என்பது திருவள்ளுவரின் உட்கோள்.

போதிய வாழ்க்கை வசதிகளை அடைந்துவிட்டதால் மட்டும் ஒரு சமுதாயத்திலுள்ள மக்கள் ஒருமித்து வாழ இயலும் என்று கூற இயலாது. ஒவ்வொருவரும் ஒரு சிறிதேனும் தனிப்பட்ட இயல்புடையவராவர். இங்ஙனம், தனிப்பட்ட இயல்புகளை ஒன்றுபடுத்தும் பண்புகள் சிலவற்றைத் திருவள்ளுவர் விளக்குகிறார். அவற்றுள் தலையாயது பிறரிடத்தில் உண்மையன்பு உடையவராய் ஒழுகுதலாம். அன்பானது பிறரிடத்தில் நமக்கு விருப்பத்தை மிகுவிக்கும். பிறர்பால் நமக்கு விருப்பம் மிக மிக அவர்கள் அனைவரும் நம் நட்பினராய் விடுவர் என்கிறார் வள்ளுவர்.

"அன்பீனும் ஆர்வம் உடைமை அதுஈனும்
நண்பென்னும் நாடாச் சிறப்பு"

ஒரு சமுதாயத்தில் ஒருவர் மற்றொருவர் மனம் புண்படப் பேசுவதும், உடலுக்குத் துன்பம் விளைத்தலும் உண்டு; ஏதாவது ஒன்றை உட்கொண்டு அவ்வாறு அவர்கள் செய்வார்கள்; அல்லது அறியாமையினாலும் அவ்வாறு செய்வதுண்டு. அத்தகைய தீங்குகளைப் பிறர் செய்தவழி அவற்றைப் பொறுத்துக்கொள்ளும் பண்பு அனைவரிடத்தும் இருப்பின், சமுதாயத்தில் தீமைகள் குறைந்து நன்மைகள் பெருகுவனவாகும். ஒருவன் நமக்குத் தீங்கு செய்யும்போது நாமும் அவனுக்குத் திருப்பித் தீங்கு செய்வோமாயின் தீமைகள் பல்கிவிடுகின்றன. தீங்கைப் பொறுத்துக்கொள்ளின் தீமை அந்த அளவோடு நின்றுவிடுகிறது. ஒருவன் இன்னொருவனுக்குப் பன்முறை தீங்கிழைப்பினும், தீங்கிழைக்கப் பெற்றவன் பொறுமையெனும் பொருவிலாப் பண்பினைத் தன்கண்

பெருக்கி அமைதியுறுவதே அறிவுடைமையாகும். இவ்வாறு பொறுமையெனும் அணிகலனல் பொலிவுறுவார்க்கு மீண்டும் மீண்டும் தீங்கிழைக்கும் ஒருவன் நாளடைவில் தன் தீங்குகளைப் பொறுத்தவரின் பெருமையையும் தன் சிறுமையையும் ஓர்ந்துணர்ந்து அவன் நல்வழிப்படவும் கூடும். அளவிலாப் பொறுமை தீமை செய்பவர் அகக் கண்ணைத் திறந்து திருத்தும் பெற்றியதாம்.

"இன்ன செய்தாரை ஒறுத்தல் அவர்நாண
நன்னயம் செய்து விடல்"

தீமை செய்பவரைத் தண்டித்தலாவது, அவர் செய்த தீமைக்கு ஈடாக நாம் திரும்பி அவர்க்குத் தீமை செய்யாமல் அவர் இழைத்த துன்பத்தைப் பொறுத்துக் கொண்டு அவர்கள் வெட்கித் தலைகுனியும்படி அவர்களுக்கு இடையருது நன்மையே செய்தலாகும் என்று இக் குறட்பாவில் திருவள்ளுவர் கூறுகிருர்.

பிறர் செய்த தீமையைப் பொறுக்காமல் நாமும் அவர்க்குத் தீமை செய்தால் "பழிக்குப்பழி வாங்கிவிட்டோம்" என்ற எண்ணம் நமக்குள் தோன்றிச் சிலமணி நேரம் இன்பத்தைத் தரலாம். அவ்வளவேயன்றி அதனல் நமக்குக் கிஞ்சிற்றும் புகழில்லை. ஆனல், பொறுமையை மேற்கொண்டால் இவ்வுலகம் அழியுமளவும் நம் புகழ் நிலைத்து நிற்பதாகும்.

"ஒறுத்தார்க்கு ஒருநாளை இன்பம் பொறுத்தார்க்குப்
பொன்றுந் துணையும் புகழ்"

என்ற இக் குறளில் வள்ளுவர் இவ் வுண்மையைத் தெளிவுபடுத்துகிருர்.

இன்னும் அவரவர்குரிய நெறியில் ஒழுகுதலும், யாவரிடத்தும் பணிவுடையவராயிருத்தலும், கடுஞ்சொல்

அகற்றி இனிய சொற்களையே பேசுதலும், பிறர் செய்த சிறு நன்றியையும் பெரிதாகப் போற்றுதலும் ஆகிய இன்னோரன்ன நற்பண்புகளால் விளையும் நன்மைகளை, ஒழுக்கமுடைமை, அடக்கமுடைமை, இனியவை கூறல், செய்ந்நன்றி அறிதல் முதலிய அதிகாரங்களில் திருவள்ளுவர் விளக்கி, அவை ஒரு சமுதாயத்தை வளர்க்குமாற்றைப் புலப்படுத்தியுள்ளார். மேலும், அவர் சமுதாய வளர்ச்சிக்கு ஊறு செய்யும் தீய பண்புகளையும் விளக்கி அவற்றைக் கடிந்துள்ளார். பிறர் இன்பத்தையும் செல்வத்தையும் கண்டு பொறாமைப்படுகின்றவன் முடிவில் தன் சுற்றத்தோடு அழிவான் என்பதையும், பிறர் பொருளைக் கவரக் கருதுபவன் குடி அழியும் என்பதையும் முறையே அழுக்காறாமை, வெஃகாமை ஆகிய அதிகாரங்களில் திருவள்ளுவர் நன்கு விளக்கியுள்ளார். இன்னும் அறம் என்பது ஒன்றில்லை என்று சொல்லி மேன்மேலும் பாவங்களைச் செய்தலினும் புறங்கூறுதல் மிகவும் தீமை பயப்பதாகும் என்றும், ஒரு பயனும் பயவாத பயனற்ற சொற்களைப் பேசுபவன் எல்லோராலும் இகழப்படுவான் என்றும், அவனுடைய நற்குணங்களெல்லாம் அவனைவிட்டு நீங்குமென்றும் புறங்கூறாமை, பயனில சொல்லாமை ஆகிய அதிகாரங்களில் வள்ளுவர் உரைத்துள்ளார்.

இங்ஙனம் நன்மை விளைக்கும் பண்புகளை வளர்த்தும் தீய பண்புகளை நீக்கியும் மக்கள் ஒருவரோடொருவர் உறவாடுவாராயின் சமுதாயம் ஒன்றுபட்டு உயரும் என்ற உண்மையை நம் தமிழ் மறையாம் திருக்குறள் உணர்த்துகின்றது. ஒவ்வொரு சமுதாயமும் நம் தெய்வப் புலவர் விதித்தன கொண்டும் விலக்கியன நீக்கியும் ஒழுகுமாயின் அது விரைந்து வளர்ந்து உலகம் ஒன்றுபடுதற்கு உறுதுணையாய் அமையும்.

---

# 11

# நாடகக் கலை

மக்கள் உயர்வுக்கு இன்றியமையாது வேண்டப் படுபவை அறிவும் பண்பும் ஆகும். இந் நிலவுலகில் சான்றோராய் விளங்குபவர் அனைவரும் அறிவும் பண்பும் நிறைந்தவர்களாவர். அறிவையும் பண்பையும் வளர்க்கும் ஆற்றலுடையவை கலைகளாம். இயல், இசை, நாடகம், சிற்பம், ஓவியம் இன்னோரன்ன கலைகளால் மக்கள் அறிவு வளர்கிறது ; அவர்தம் உள்ளமும் பண்படுகிறது.

கோவலன் மதுரைமாநகர்க்கண் கள்வனெனக் குற்றஞ் சாற்றப்பெற்றுக் கொலையுண்டான். இத் துன்பச் செய்தியை அவன்தன் காதலியாகிய மாதவி செவியேற்றதும் உடனே துறவுபூண்டாள் ; இவ் வுலகப் பற்றினைத் தன் உள்ளத்தினின்றும் அறவே அழித்தொழித்தனள். அவளால் எங்ஙனம் இவ்வுலகப் பற்றினை உடனே விடுத்துத் துறவறம் மேற்கொள்ள இயன்றது ? இது சிந்திக்கற்பாலது. இளம்பருவம்தொட்டு அவள் உள்ளம் கலையில் தோய்ந்திருந்தது. ஆடற் கலையிலும் பாடற் கலையிலும் அவள் தனித்திறம் பெற்றுத் திகழ்ந்தனள். பல காலும் கலையில் நனிதோய்ந்திருந்த அவள் உள்ளம் நன்கு பக்குவநிலை எய்தியிருந்தது. காதலன் இறந்து பட்டான் என்ற செய்தி அறிந்ததும், பக்குவநிலை எய்தி

யிருந்த அவள் உள்ளம் விரைந்து துறவறத்தை நாடிற்று. இதுமட்டோ? கண்ணையும் கருத்தையும் கொள்ளைகொள்ளும் கட்டழகு வாய்ந்த இளஞ்செல்வி மணிமேகலையையும் அவள் துறவறம் பூணும்படி செய்தாள். இங்ஙனம் அவள் உள்ளம் பண்பட்ட நிலை எய்த உறுதுணையாய் இருந்தவை கலைகளேயாம் சிலப்பதிகாரத்தை நுணுகி ஆராய்வார்க்கு இவ் வுண்மை புலப்படும்.

இவ்வாறே கலைகளால் பண்பட்டிருந்த சீவகன் ஒரு சிறு நிகழ்ச்சியைக் கண்டதும் மெய்யுணர்வு பிறந்து துறவறம் மேற்கொண்டான். ஒருநாள் சீவகன் தன் தேவியர் சூழச் சோலையை யடைந்து அதன் வளத்தைக் கண்டு களித்தவண்ணம் ஒரு பலாமரத்தின் நீழலை அடைந்தனன். அப்போது அங்கு ஓர் ஆண் குரங்கு தன்னோடு பிணங்கிய தன் காதலுக்குரிய மந்தியை மகிழ்விக்கப் பலாப்பழம் ஒன்றை எடுத்து அதற்குக் கொடுத்தது. சோலைக் காவலன் அதைக் கண்டு விரைந்துவந்து தான் அக் கனியை மந்தியிடமிருந்து கவர்ந்து உண்டான். அக் காட்சியைக் கண்டதும் சீவகனுக்கு நிலையாமை உணர்வு பிறந்தது. "கைப்பழம் இழந்த மந்தி அரசை இழந்த கட்டியங்காரனை யொத்தது; சோலைக் காவலன் அக் கட்டியங்காரனைக் கொன்று அரசையெய்திய என்னை யொத்தனன். வலியான் கவர்ந்து நுகர்தற்குரிய இச் செல்வத்தால் அடையும் பயன் யாது?" என்று எண்ணிச் சீவகன் துறவறம் மேற்கொண்டான். அச்சிறு நிகழ்ச்சி அவன் அகக்கண்களைத் திறந்தது வியப்பே யன்றோ? சீவகன் அறியாத கலை இல்லை. பல கலைகளையும் கற்றுத் துறைபோகிய செம்மல் அவன். கலைகளால் பண்பட்டிருந்த அவன் உள்ளம் ஒரு சிறு நிகழ்ச்சியின் காரணமாக மெய்யுணர்வு எய்தும் தன்மை யடைந்தது.

இக் கலைகளுள்ளும் நாடகம் தனிசிறந்த தெனலாம். தமிழில் இயல், இசை, நாடகம் என்ற முறைவைப்பே நாடகம் சிறந்த கலை என்பதை உணர்த்துகின்றது. முன்னே கூறும் ஏனையவற்றினும் இறுதியிலே கூறுவது சிறப்புடையது. இது தமிழ் முறை. மூன்று கலைகளுள் ளும் நாடகம் இறுதியிலே குறிக்கப்பெறுவதால் அஃது ஏனையவற்றிலும் சிறப்புடையது என்பது போதரும். இன் னும் நாடகத்தில் இயலும் இசையும் இணைந்துள்ளன. நாடக மேடை அமைப்பில் சிற்பம், ஓவியம், ஒப்பனை இன்னோரன்ன கலைகளும் பொருந்தியுள்ளன. எனவே, நாடகம் ஒரு பல்கலைக் கொள்கலம் எனலாம். இயல் கருத்துக்கு இன்பமூட்டுவதாகும். இசை செவிக்கும், கருத்துக்கும் இன்பமூட்டுவதாகும். நாடகமோ கண், செவி, கருத்து ஆகிய இவை மூன்றுக்கும் இன்பமூட்டி நம்மை உணர்ச்சிவெள்ளத்துள் ஆழ்த்துகின்றது. மேலும், நூல் வடிவிலுள்ள ஒரு கதையையோ, வரலாற் றையோ நாம் படித்து முடிக்கப் பலமணி நேரமாகும். ஆனால், நாடகத்தில் அதையே இரண்டு அல்லது மூன்று மணி நேரத்தில் சிறிதும் சோர்வில்லாமல் முழுமையும் அறிந்துகொள்கிறோம். இயலும், இசையும் கற்றோர்க்கே பயனளிப்பவை. நாடகம் கற்றோர், கல்லாதார் ஆகிய அனைவருக்கும் பயன் அளிப்பதாகும்.

ஒரு நாடகத்தைக் காணும் மக்கள் பல்வகை உணர்ச்சி வயப்படுகிறார்கள். ஒவ்வொரு காட்சியைக் காணும் போதும் ஒவ்வொரு வகை உணர்ச்சியை அவர்கள் எய்து கிறார்கள். போர் முதலான காட்சிகளைக் காணுங்கால் வீர உணர்ச்சியும், காதல் காட்சியை பார்க்கும்போது இன்ப உணர்ச்சியும், துன்பக் காட்சிகளை நோக்குங்கால் அவல உணர்ச்சியும் அடைகிறார்கள். எனவே, நாடகத் தைக் காண்போர் உள்ளம் பலவகை உணர்ச்சிகளில்

ஆழ்கின்றது. இலக்கியத்தைப் படிப்போரும் இங்ஙனம் பலவகை உணர்ச்சியைப் பெறுவர். இவ்வாறு பலவகை உணர்ச்சி வயப்படும் உள்ளம் நாளடைவில் பண்படு கிறது. இஃது எங்ஙனம் என்பது சிந்தித்தற்குரியது. தன் அருமைக் குழந்தையை உறங்கவைக்க வேண்டும் என்று ஒரு தாய் எண்ணுகிருள். அவள் என்ன செய் கிருள் ? குழந்தையைத் தொட்டிலில் இட்டுத் தாலாட்டிய வண்ணம் தொட்டிலை ஆட்டுகிருள். அவள் தன் தாலாட்டு ஓசையும் தொட்டிலின் அசைவும் குழந்தையை உறங்கச் செய்கின்றன. இதுபோலவே பல்வகை உணர்ச்சிகளால் மோதுண்ணும் உள்ளம் அமைதி எய்துகின்றது.

நாடகக் கலை தமிழகத்தில் மிகப் பழங்காலத்திலேயே தோன்றியதாகும். இன்றைக்கு ஏறத்தாழ மூவாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு தோன்றிய தொல்காப்பியம் என்ற நூலில் நாடகம் என்ற சொல் காணப்படுகிறது.

"நாடக வழக்கினும் உலகியல் வழக்கினும்
பாடல் சான்ற புலனெறி வழக்கம்..."

என்று தொல்காப்பியம் கூறுகின்றது. சங்க இலக்கியங் கள் நாடகத்தைக் கூத்து என்று நவில்கின்றன. கதை தழுவிய கூத்து நாடகமாகும். அடியார்க்கு நல்லார் என்ற சிலப்பதிகார உரையாசிரியர் பரதம், அகத்தியம், பரதசேனுபதீயம், மதிவாணன் முதலிய நாடக நூல்களைக் குறிப்பிடுகின்ருர்.

"கூத்தாட் டவைக்குழாத் தற்றே பெருஞ்செல்வம்
போக்கும் அதுவிளிந் தற்று"

இத் திருக்குறளில் காணும் 'கூத்து' என்ற சொல் அக் கலையின் தொன்மையை உணர்த்துவதாகும்.

"நாடகத்தால் உன்னடியார்போல் நடித்து நானடுவே
வீடகத்தே புகுந்திடுவான் மிகப்பெரிதும் விரைகின்றேன்"

என்று இன்றைக்கு ஏறக்குறைய 1200 ஆண்டுகட்கு முன்பிருந்த மணிவாசகப் பெருமான் பாடுகின்ருர். இச் சான்றுகளினின்றும் நாடகக் கலே தமிழகத்தில் மிகத் தொன்மைக் காலந்தொட்டு நிலவிவந்துள்ளது என்பது அறியலாகும்.

பழங்காலத்தில் நாடகம் பெருந்திரளாகக் கூடும் மாந்தர்முன் நடிக்கப்பெற்றது. முதன் முதலில் நடனமும் பாட்டும் ஒருங்கே நிகழ்த்தப்பெற்றன. இதிலிருந்து நாடகம் தோன்றிற்று. முதலில் உரையாடல்கள் பாடல் வடிவில் இருந்தன. பின்பு உரைநடை கலந்தது. நாளடைவில் நாடகம் வேத்தியல், பொதுவியல் என இரு பகுப்பு உற்றது. வேந்தர் முன்னிலேயில் நிகழ்வது வேத்தியல், பொதுமக்கள் முன் நடைபெறுவது பொது வியல். வேந்தர் மாளிகையைச் சேர்ந்த கூத்தரங்கத்தின் பெயர் கூத்தப்பள்ளி எனப்படும்.

கிரேக்க நாட்டிலும் உரோம் நாட்டிலும் மிகப் பழங் காலத்திலிருந்து நாடகக் கலே வளர்ச்சியுற்று வந்துள் ளது. பழங்காலத்தில் உரோமானியர் பொய்முகங்களே அணிந்து நடித்தனர் எனக் கூறப்படுகிறது. நாடகத்தில் தோன்றும் ஒவ்வோர் உறுப்பினர்களின் தன்மைக்கேற்ற பொய்முகங்களே அவர்கள் அணிந்து நடித்தனர். அக் காலத்தில் நாடகத்தைக் காண மக்கள் பெருந்திரளாகக் கூடுவர். சேய்மையிலிருந்து பார்ப்பவருக்கும் நடிப்பவர் முகம் நன்கு தெரியும்பொருட்டு பொய்முகங்களே பெரிய அளவில் நடிகர்கள் அணிந்ததாகத் தெரிகிறது.

ஆங்கில நாட்டில் இடைக்காலமாகிய கி. பி. 600 லிருந்து 1500 வரை நாடகக் கலே வளர்ச்சி எய்தியது.

அடுத்து எலிசபெத் அரசியார் அரசாண்ட காலத்தில் அக் கலை உச்சநிலை அடைந்தது. அக் காலத்தில் சேக்ஸ்பியர் நாடகங்கள் அடிக்கடி நடிக்கப்பட்டன. அவ்வாசிரியர் காலத்திலும் அதற்கு முன்பும் மேலைநாட்டில் பெண்கள் வேடந்தரிக்கவில்லை என்றும், ஆண்களே பெண் வேடம் தரித்தார்கள் என்றும் கூறுவர். ஆனால், நம் நாட்டில் மிகப் பழங்காலந்தொட்டே பெண்டிர் அரங்கமேறியுள்ளனர். இதற்கு நம் பண்டை இலக்கியங்கள் சான்றாகும்.

பழங்காலத்தில் தமிழகத்தில் மிகச் சீரிய நிலை எய்தியிருந்த நாடகக் கலை ஏனோ இடைக்காலத்தில் அழிந்தது. சமணர்களாலும் பௌத்தர்களாலும் அக் கலை அழிந்ததெனச் சிலர் கூறுவர். முத்தமிழும் இணைந்த மிகச் சீரிய காப்பியமாகிய சிலப்பதிகாரத்தை இயற்றிய இளங்கோவடிகள் சமணர். இயல் இசை நாடகங்களின் நுட்பங்களை விளக்கி அவற்றைச் சிறப்பித்துக் கூறும் சீவகசிந்தாமணி என்ற நூலின் ஆசிரியராகிய திருத்தக்கதேவரும் சமணர். இத்தகைய சமணப் புலவர்களால் முத்தமிழும் வளர்ந்தன. எனவே, சமணர்களால் நாடகக் கலை அழிந்ததென்பது நம்புதற்கில்லை. எப்படியோ இடைக்காலத்திலும் அதன் பின்னரும் நாடகக் கலை தாழ்ச்சி எய்தியது. ஆனால், தற்போது நாடகக் கலை வளர்ச்சியடைந்துவருகிறது. இது பெரு மகிழ்ச்சிக்குரியது. அரசியலாரும் அக் கலையின்பால் பேரூக்கம் காட்டுகின்றனர். பள்ளி மாணவரும், கல்லூரி மாணவர்களும், ஏனைய இளைஞர்களும் நாடகக் கலையிடத்து ஆர்வமிகுந்தவராய் விளங்குகின்றனர். இனி நாடகக் கலை விரைந்து வளரும். அதற்கு நல்ல எதிர்காலம் உண்டு என்பது உறுதி. வாழ்க நாடகக் கலை! வெல்க தமிழ்!

---